KALKI
22.7.2007 ரூ.8.00
80 பக்கங்கள்



ஜெ அழைப்பு...
அன்புமணி பதில்...!

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...



சர்ச்சை நாயகி
பிரதிபா...



-தவிர்க்க முடியாத
ஒப்பீடு!



Team
Health Shoppe
For Wellness

சென்னையில், டீம் ஹெல்த் ஷாப்பின் 4வது கிளை திறப்பு - புரசைவாக்கத்தில்

# ஆலோ வேரா அருந்துங்க ஜோரா

## ஆலோ வேரா ஜூஸ்...

நம் உடலின் நோய் எதிர்ப்பு சக்திக்கு தேவையான இன்றியமையாத அமினோ ஆசிட், விட்டமின், மினரல் மற்றும் என்சைம் ஆகியவற்றை கொண்ட ஆலோ வீரா தற்போது இயற்கையான ஜூஸ் வடிவில்...

- Cold press மூலம் பதப்படுத்தப்பட்டது.
- தரமான, சுத்தமான இலைகளிலிருந்து தயாரிக்கப்பட்டது.
- தேவையான சத்து பொருட்களை காக்க 100% stabilize செய்யப்பட்டது.

## டீம் ஹெல்த் ஷாப்பின் இதர பொருட்கள்

• டீம் சோடியம் அல்லாத உப்பு • டீம் அரை உப்பு • டீம் நல்லெண்ணெய்
• டீம் தேங்காய் எண்ணெய் • கற்றாழை - சருமம் மற்றும் மேனிப் பராமரிப்பு பொருட்கள் • தேன் வகைகள் • டீம் எனர்ஜி வாட்டர் • பனைப்பொருட்கள்
• மரபு முறை, கைகுத்தல் உணவுப் பொருட்கள் • கொடைக்கானல் மலை தைலம்

**ஸ்பெஷல் ஆஃபர்***
அனைத்து ஆலோவீரா தயாரிப்புகளுக்கும் 5 முதல் 10% தள்ளுபடி. இச்சலுகை குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே

*நிபந்தனைக்குட்பட்டது







**TEAM EUBIO CARE**
(Division of CAL)

வண்டலூர்: - போன்: 2275 0502
இந்திரா நகர்: - போன்: 4269 5115
அண்ணாநகர்: - போன்: 4269 3332
புரசைவாக்கம்: 23B, கீழ்தளம், பிரின்ஸ் டவர், (அபிராமி மால் எதிரில்), புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-10. போன்: 4542 8898

For bulk requirements, Contact :
Team House - GST Road, Vandalur, Ch - 48
Fax : 22750860 (or)
E-mail: teamhealthshoppe@drraoholdings.com

www.teamhealthshoppe.com




OPEN ON ALL DAYS



அயல்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள் மெச்சும்படி, நாம் தாஜ்மஹாலைப் பராமரிக்கிறோமா?

# உலக அதிசயம்- லாபம் யாருக்கு?

**பு**திய ஏழு உலக அதிசயங்களைத் தேர்ந்தெடுக்க நடத்தப்பட்ட உலகளாவிய ஓட்டெடுப்பில், தாஜ் மஹால் தேர்ந்தெடுக்கப்பட்டதற்காக இந்தியர்கள் அனைவரும் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் உண்மையான லாபம் யாருக்கு என்ற சர்ச்சையும் எழுந்துள்ளது.

முதலில் யுனெஸ்கோ அமைப்பின் சார்பில்தான் இந்த ஓட்டெடுப்பு நடத்தப்படுவதாக அறிவிக்கப்பட்டாலும், பின்னர் யுனெஸ்கோ தங்களுக்கும், இந்த விவகாரத்துக்கும் சம்பந்தமில்லை என்று ஒதுங்கிக் கொண்டது. ஆக, 'புதிய ஏழு உலக அதிசயங்கள்' என்ற பெயரிலேயே ஒரு நிறுவனத்தை 2000-ஆம் ஆண்டில் ஆரம்பித்து நடத்தி வரும், சுவிட்சர்லாந்து நாட்டைச் சேர்ந்த 'பெர்னார்டு வெப்பர்' என்ற தனி நபரது மூளையில் உதித்த ஐடியாதான் இது. லாப நோக்கம் இல்லாத தொண்டு நிறுவனம் என்று சொல்லப்பட்டாலும்கூட, இந்த ஓட்டெடுப்பு மூலமாக அந்த நிறுவனம் கோடிக்கணக்கில் லாபம் சம்பாதித்துள்ளது.

வாக்கெடுப்பை அறிவித்த கையோடு, இந்த நிறுவனம் உலக அதிசயங்களின் படங்களை டி-ஷர்ட்டிலும், காஃபி குடிக்கும் கப்களிலும், சாவிக் கொத்துகள், பேனா போன்ற இதர பொருட்களிலும் அச்சிட்டு உலகம் முழுவதும் விற்பனை செய்தார்கள். இந்த விற்பனை மூலமாக மொத்தம் சம்பாதித்தது எவ்வளவு என்பது புதிய உலக அதிசயங்கள் நிறுவனம் மட்டுமே அறிந்த ரகசியம்.

இந்தியாவில் தாஜ்மஹாலுக்கு ஆதரவாக வாக்குத் திரட்ட ஏ.ஆர்.ரஹ்மான்,

லதா மங்கேஷ்கர் போன்ற பிரபலங்களின் பிரத்யேக இசை ஆல்பங்களும் வெளியிடப்பட்டன. இந்தியாவில் இந்த ஓட்டெடுப்பின் அங்கமாக, தாஜ்மஹாலுக்கு ஆதரவாக வாக்குச் சேகரிக்கும் ஒட்டு மொத்த காண்ட்ராக்டையும் வளைத்துப் போட்டது ஐ மீடியா என்ற நிறுவனம். ''ஸ்பான்ஸர்கள் மூலமாகக் கோடிக்கணக்கில் லாபம் சம்பாதித்துவிடலாம் என்று கணக்குப் போட்ட ஐ மீடியா பத்திரிகைகள், டீ.வி. சேனல்கள், மற்றும் இதர வகைகளில் இந்தப் பிரசாரத்துக்கு எழுபது கோடி ரூபாய் வரை பட்ஜெட் போட்டுச் செலவிட்டது. ஆனால், கடைசியில் கணக்குப் பார்த்த போது தலையில் துண்டுப் போட்டுக்கொள்ள வேண்டிய நிலைமை அதற்கு ஏற்பட்டுவிட்டது'' என்கிறார்கள் விவரமறிந்த விளம்பரத்துறையினர். காரணம், ஐ மீடியா எதிர்பார்த்ததுபோல விளம்பரதாரர்கள் பணத்தைத் தண்ணீராகச் செலவழிக்க முன்வரவில்லை என்பதுதான்.

ஆனாலும், இந்தியாவின் பல்வேறு மொபைல் கம்பெனிகளுக்குச் செமத்தியான லாப அறுவடை. இந்தியாவிலிருந்து இந்த வாக்கெடுப்பில் ஒரு கோடியே இருபது லட்சம் எஸ்.எம்.எஸ். வாக்குகளும், ஒரு கோடியே எண்பது லட்சம் இன்டர்நெட் வாக்குகளும் பதிவாகி இருக்கின்றன. இந்திய மொபைல் கம்பெனிகள் ஒரு எஸ்.எம்.எஸ்.க்குக் குறைந்த பட்சமாக மூன்று ரூபாய் கட்டணம் வசூலித்தன. இதன் மூலமாகக் கிடைத்த மொத்த தொகையில் 75 சதவிகிதம் மொபைல் கம்பெனிகளுக்குப் போனது. 15 சதவிகிதம் மத்திய அரசுக்கு வரியாகக் கிடைத்தது. மீதி பத்துச் சதவிகிதத்தைப் புதிய உலக அதிசயங்கள் நிறுவனமும், ஐ மீடியா நிறுவனமும் சமமாகப் பகிர்ந்துகொண்டன.

உலக அதிசயங்கள் ஏழில் தாஜ்மஹால் தேர்ந்தெடுக்கப்பட்டதால் என்ன லாபம்? ''இது ஓர் உலக அங்கீகாரமற்ற அமைப்பின் வேலை தான் என்றாலும், உலக மக்களின் கவனம் தாஜ்மஹால் மீது திரும்பியது அல்லவா? இது தாஜ்மஹாலின் புகழ் இன்னும் உயர உதவி இருக்கிறது என்கின்றனர். அதெல்லாம் சரி! ''அயல் நாட்டு சுற்றுலாப்பயணிகள் மெச்சும்படி தாஜ்மஹாலையும், அது அமைந்துள்ள ஆக்ரா நகரத்தையும் நாம் பராமரிக்கிறோமா?'' என்று சூடாகக் கேட்கிறார் ஆக்ராவின் டூரிஸ்ட் கைடு சாவந்த்.

தொகுப்பு : **மானஸா**




# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
**2225 1522, 2225 0623, 2225 1324**

தொலைநகல் :
**044 - 22251021**

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 440/-**
**ஆறு மாதம் : ரூ. 220/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



பைரன்சிங் செகாவத்தா? என்றால் காங்கிரஸ் கூட்டணியின் வேட்பாளரான பிரதிபா பாட்டீல்தான். ஐந்து வருடங்களுக்கு ஒருமுறை கையில் மை வைத்துக்கொள்ளும் ஒவ்வொருவரும் இப்போது அந்த நாற்காலியை அலங்கரித்துக் கொண்டிருக்கும் அப்துல் கலாமுடன், பிரதிபா பாட்டீலை ஒப்பிட்டுப் பார்ப்பது தவிர்க்க முடியாத ஒன்றாகிவிட்டது.

இந்தியாவே பெருமை கொள்ள வேண்டிய அணு விஞ்ஞானி அப்துல் கலாமை, நாட்டின் மிக உயர்ந்த ஜனாதிபதி பதவியில் அமர வைத்து அழகு பார்த்து வருகிறோம். அணு விஞ்ஞானியாக இருந்தபோதும் சரி, முதல் குடிமகனாக இருக்கும் இந்த நிமிடம் வரையிலும் சரி... எந்தவிதமான சர்ச்சைக்கும் ஆட்படாதவர், இடம் தராதவர் கலாம். ஆனால், அவர் அமர்ந்திருக்கும் நாற்காலியை அடுத்து அலங்கரிக்க விருப்பதாகச் சொல்லப்படும் பிரதிபா பாட்டீலின் பெயரை அறிவித்தது முதலே பிரச்னைகள்தான். அது சரியில்லை, இது சரியில்லை என்று நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக நீண்டு கொண்டே போகிறது - பிரதிபா மீதான குற்றச்சாட்டுகளின் பட்டியல்.

இந்தியாவில் ஜனாதிபதி அமரப் போவது பிரதிபா பாட்டீலா? அவரை எதிர்த்து சுயேச்சையாக பா.ஜ.க. கூட்டணி ஆதரவுடன் போட்டியிடும்

ஜனாதிபதி என்பவர் ரிடையர் ஆன அரசியல்வாதி என்று இருந்த பாரம்பரியத்தை மாற்றி நம் நாட்டு இளைஞர்கள், மாணவ - மாணவிகளுக்கு ஆதர்ச புருஷராகத் திகழ்ந்தவர் அப்துல் கலாம். ஒரு விஞ்ஞானி குடியரசுத் தலைவராகவும், ஒரு பொருளாதார மேதை பிரதமராகவும் இருப்பது உலக சரித்திரத்தில் ஒரு மைல்கல் என்றால் மிகை இல்லை. எளிமையின் உருவமாகத் திகழ்பவர் கலாம். இந்தியாவில் மட்டும் மக்கள் நேரடியாக வோட்டுப் போட்டு ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்கும் நிலை இருந்தால் அப்துல் கலாம் தொடர்ந்து வெற்றி பெறுவதும்,

பரவலாக அதிக அளவு அதிருப்தியான பின்புலம் கொண்டுள்ள பிரதிபா பாட்டீலை, காங்கிரஸ் மற்றும் கூட்டணிக் கட்சிகள் விடாப்பிடியாக ஆதரிப்பதன் ரகசியம்தான் என்ன?

– ஆர்.நாகராஜன், சென்னை

# தவிர்க்க முடியாத

அவரை எதிர்த்துப் போட்டியிடு பவர்கள் டெபாசிட் இழப்பதும் உறுதி! தமது பதவிக் காலத்தில் பல் வேறு நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டு கலாம் ஆற்றிய உரைகள் வெறும் சம்பிர தாய உரைகளாக இல்லாமல், இந்த நாட்டின் இளைய தலைமுறை யினரை, ஆசிரியர்களை, தொழில் துறையினரை தேச பக்தியுடனும், கடமை உணர்வு டனும் செயல்பட ஊக்கமளித்தன. எளிய குடும்பத்தில் பிறந்து உழைப்பு, தன் முனைப்பு, நேர்மை என்ற நன்னெறிப் பாதையில் ஏறி வந்தவர்; இவருடைய வாழ்க்கைக் குறிப்பு நூலான 'அக்னிச் சிறகுகள்' இன்று லட்சோப லட்சம் இந் தியர்களின் டானிக்! அவ்வப்போது சில கருத்துகளை அழுத்தமாக அவர் தெரிவித்த போது (உதாரணம்: இரண்டு கட்சி ஜன நாயகம்) சர்ச்சைகள் உருவாயின என்றா லும், முகலாய மன்னர்களின் படையெடுப் பின்போது பெண்களைக் காப்பாற்ற வந்தது தான் 'பர்தா' என்றெல்லாம் சொல்லி மூக் குடைபடவில்லை.

## வாசகர் வாய்ஸ்!

பத்திரிகைச் செய்தி களைப் பார்த்தால் குற்றச்சாட்டுக் குவியல்களின் பிரமாண்டமாக இருப்பார் போலிருக்கிறதே பிரதிபா பாட்டீல்? ஜனாதிபதி தேர்தல் வேட்பாளராக அவரைத் தேர்வு செய்ததில் கலை ஞருக்கு அப்படி என்ன பெருமை?

- பி.இராஜேந்திரன், லோயர் அணைக்கட்டு

இவை அனைத்துக்கும் அப்பால் இன்னொரு முக்கியமான ஒப்பீடும் அவ சியமாகிறது. வார்டு கவுன்சிலர் முதல் மத்திய அமைச்சர் வரை அனைத்துப் பதவிகளையும் கிரிமினல் குற்றம் சாட் டப்பட்டவர்கள் அலங்கரிப்பது சகஜ



ஜனாதிபதி வேட்பாளராகப் போட்டியிடும் பிரதிபா பாட்டீல் இன்னும் சொத்துக் கணக்கை வெளியிடவில்லை. அவருக்கு எதிராக, பல்வேறு குற்றச்சாட்டுகள் எழுந்துள்ளன. ஆகையால், இந்த விவகாரங்களில் தலையிட்டு, தேர்தல் ஆணையம் உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று அத்வானி கூறுகிறாரே. இது சரியா?

**- எச்.அந்தோணி, மும்பை**



மாகிவிட்ட இன்றைய அரசியலில், பல்வேறு குற்றச்சாட்டுகளுக்கும் ஆளான ஒருவரை, ஜனாதிபதி பதவிக்கு வேட்பாளராக நிறுத்துவது என்பது இந்திய சரித்திரம் காணாத புதுமை. கிரிமினல் குற்றச்சாட்டுகளுக்கு உள்ளானவர்கள் மற்ற பதவிகளை வகிப்பதற்கும், ஜனாதிபதி பதவி வகிப்பதற்கும் அரசியல் சட்டரீதியாக பெரிய வித்தியாசமுண்டு. முதல் தகவல் அறிக்கை, குற்றப்பத்திரிகை இன்ன பிற சமாசாரங்கள் எல்லாம் ஜனாதிபதி மாளிகைக்குள் நுழையத் தடா போட்டிருக்கிறது நமது அரசியல் சட்டம்.

''நான் எந்தத் தவறும் செய்யவில்லை. எதிர்கட்சிகள் என்னுடைய நற்பெயருக்குக் களங்கம் ஏற்படுத்தும் நோக்கத்துடன் அவதூறுப் பிரசாரம் செய்கின்றன'' என்று சொல்கிறார் பிரதிபா பாட்டீல். ஆனால், எதிர்கட்சிகளோ ''இவரை ஜனாதிபதி வேட்பாளராக அறிவித்தபிறகு நாங்கள் சொல்லும் குற்றச்சாட்டுகள் அனைத்தும், திடீரென்று நாங்கள் தோண்டித் துருவி எடுத்தவை இல்லை. பல வருடங்களுக்கு முன்பாகவே அவர் மீதும், அவரது குடும்பத்தினர் மீதும் சுமத்தப்பட்டவைதாம். அவரது அரசியல் அதிகார பலத்தாலும், மேலிட செல்வாக்காலும் அழுத்தம் கொடுத்து, நடவடிக்கை எதுவும் எடுக்கப்படாமல் பார்த்துக்கொண்டார்; அவ்வளவுதான்!'' என்று பதிலடி கொடுத்திருக்கிறார்கள்.

பிரதிபா பாட்டீல் மீது அப்படி என்னதான் குற்றச்சாட்டுகள்? பிரதிபா பாட்டீல் பெண்கள் நலனுக்காக ஒரு வங்கியைத் தம் பெயரிலேயே தொடங்கினார். அந்த வங்கி பொதுமக்களிடமிருந்து திரட்டிய ஏராளமான பணத்தை ஸ்வாகா செய்துவிட்டது. இதில் நடந்த தில்லுமுல்லுகளை சில ஆண்டுகளுக்கு முன்பே இந்திய ரிசர்வ் வங்கியின் ஆய்வறிக்கை வெட்ட வெளிச்சமாக்கியது. இவர் சம்பந்தப்பட்ட சர்க்கரை ஆலை வாங்கிய இருபது கோடி ரூபாய் கடன், வங்கியில் வாராக்கடனாகி விட்டது. பிரதிபா பாட்டீலும், அவர் குடும்பத்தினருமாக பெண்கள் சேவை அமைப்புகள் பலவற்றை ஆரம்பித்து நடத்தி வந்தார்கள். அப்படி நடத்தப்பட்ட ஓர் அமைப்பின் கீழ் அமைக்கப்பட்ட பள்ளிக்கூடம் ஒன்றின் ஆசிரியரான தாகே என்பவர், பதினைந்து மாதங்களாகத் தமக்குச் சம்பளமே தரப்படாததாலும், தாம் கடுமையான துன்புறுத்தல்களுக்கு ஆளானதாலும் தற்கொலை செய்து கொள்வதாக ஸ்டாம்ப் பேப்பரில் குறிப்பு எழுதி வைத்துவிட்டுத் தற்கொலை செய்துகொண்டார். பிரதிபா

ஜனாதிபதி வேட்பாளர் எந்த ஒரு சந்தேகத்துக்கும் அப்பாற்பட்டவராக இருக்க வேண்டாமா?

**- மன்னை ஜி.நீலா, சென்னை**

பாட்டீலின் கணவர் தேவி சிங் ஷெகாவத்தான் தம்முடைய மரணத்துக்குக் காரணம் என அவர் எழுதி வைத்திருந்தார். மறைந்த ஆசிரியரது மனைவி தொடர்ந்த வழக்கு, மும்பை உயர்நீதி மன்றத்தின் நாக்பூர் கிளையில் விசாரணைக்கு வந்துள்ளது. இவை எல்லாம் உதாரணங்கள். இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளிதழில் அருண்ஷோரி தொடர்கட்டுரையே எழுதி நார் நாராகக் கிழித்திருக்கிறார்.

தத்துவமேதை முதல் அறிவியல் அறிஞர் வரை பலரும் வகித்த ஜனாதிபதி பதவிக்குப் போட்டியிடுகிறார் பிரதிபா பாட்டீல்.

> **வே**ட்புமனு தாக்கல் செய்வதற்கு முன்பே குற்றச்சாட்டுகள் அள்ளி வீசப்படுகிற நிலையில் நாட்டின் ஓர் உயர்ந்த பதவிக்கு பிரதிபா பாட்டீல் நிற்பது சரியா? முறையா? நியாயமா?
>
> **- என்.மாணிக்கம், மின்னல்**

சோனியா காந்தி அடுத்த பாராளுமன்றத் தேர்தலில் எதிர்பார்க்கும் தமக்குச் சாதகமான முடிவுகளுக்கும் அச்சாரமாக தனது கடமையைச் செய்து விட்டார். கட்டுப்பாடுடன் காங்கிரஸ் கூட்டணியும், இடதுசாரிகளும் வாக்களித்து அவரை ஜனாதிபதியாக்கி விடுவார்கள். ஆனால், ஜனாதிபதி பதவியின் கண்ணியத்தையும், கௌரவத்தையும் பிரதிபா பாட்டீல் காப்பாற்றுவாரா? நம் முன் தொக்கி நிற்கும் பிரமாண்டமான கேள்வி இதுதான்!

**- அர்ஜுன்**

**அட்டைப் படம்: பிள்ளை**




தெலுங்கில் வெளியாகி சக்கைப் போடு போட்ட 'அத்தடு' இப்போது தமிழில் 'நந்து'வாகியிருக்கிறது. சோலை ராஜாவின் கைவண்ணத்தில் 'நந்து' நன்றாகவே வந்திருக்கிறான். அடிதடியை வாழ்க்கையாகக் கொண்ட ஒருவன், அன்புக்கு அடிபணியும் விதத்தை ஆக்ஷன், சென்டிமெண்ட், ரொமான்ஸ் என்று சரிவிகிதத்தில் கலந்து தந்திருக்கிறார்கள்.

பட்டையைக் கிளப்பும் பார்வை, மிரள வைக்கும் பாடி லாங்குவேஜ், துடிக்க வைக்கும் ஆக்ஷன் என்று மகேஷ்பாபு வரும் இடங்களிலெல்லாம் பொறி பறக்கிறது. பாசத்துக்குப் பழகி கண் கலங்கும்போது வேறுவிதமான நடிப்பையும் வெளிப்படுத்துகிறார். அவரையே சுற்றிச் சுற்றி வந்து மோதும் தௌஸண்ட் வாலா பட்டாசு த்ரிஷா. தாவணி போட்ட தீபாவளியாகத் துறுதுறு, குறுகுறு கும்மாளம்.

சி.பி.ஐ. ஆபீஸராக 'நம்ம செல்லம்' பிரகாஷ்ராஜ். அமைதியான விருந்தை ஆர்ப்பாட்டமில்லாமல் படைக்கிறார். ஆனால், அவரது யானைப் பசிக்கு இது சோளப்பொறி பாத்திரம்தான்.

பெயரே தெரியாத பல தெலுங்கு முகங்கள்... வருகிறார்கள்... போகிறார்கள். பாதிக்கு மேல் வரும் காமெடியன் பிரம்மானந்தம், கதிகலங்க வைக்கிறார். மிரட்டியே மனைவியைக் கதற அடிப்பதாகட்டும், த்ரிஷாவுக்குப் பாடம் நடத்தி பாடம் கற்பதாகட்டும் நகைச்சுவை மேளாவே நடத்துகிறார். இசை மணி ஷர்மா. பின்னணிக்கு உழைத்ததை சற்றுப் பாடல்களுக்கும் அளித்திருக்கலாம்.

சோலைராஜாவின் வசனங்கள் குத்தீட்டியாய் நம்முள் இறங்குகின்றன. இயக்குநர் விக்ரமின் திரைக்கதை நேர்த்தி பிரமிக்க வைக்கிறது. வேகமாக நகரும் படத்தை அங்கங்கே அணைபோட்டுத் தடுப்பது பாடல்கள்தான். திடீர் திடீரென்று முளைத்து ரசிகனின் பொறுமையை ரொம்பவே சோதிக்கின்றன. க்ளைமேக்ஸில் நந்துவை பிரகாஷ்ராஜ் மன்னித்து விட்டு விடுகிறார் இன்னும் எத்தனை படங்களில் இதையே பார்ப்பது?

- லாவண்யா



தமிழக அரசியல் விவகாரங்களை தமது தந்தை மருத்துவர் ராமதாஸ் அவர்களிடம் விட்டுவிட்டு, தமது துறை பற்றிய செயல்பாடுகளில் அதிகம் கவனம் செலுத்தி வருபவர் மத்திய சுகாதாரத்துறை அமைச்சர் அன்புமணி. துறைத் தொடர்பான சர்ச்சைகளைத் தவிர, தமிழக அரசியல் நிலவரம் குறித்தும் இங்கே பேசுகிறார்.

**புகையிலை எதிர்ப்புப் பிரசாரத்தைத் தீவிரமாக நடத்தி, சர்வதேச விருது வாங்கும் அளவுக்குச் செயல்படும் உங்களை, தினகரன் கருத்துக் கணிப்பில் குறைவாக மதிப்பிட்டிருந்தார்களே?**

''அந்தக் கருத்துக் கணிப்பு எந்த நோக்கத்துக்காக நடத்தப்பட்டது என்பது வெளிப்பட்டு, அதன் தாக்கங்கள் எப்படிப்பட்ட விளைவுகளை ஏற்படுத்தின என்பது எல்லோருக்கும் தெரியும். அந்தக் கருத்துக் கணிப்பை, ஒரு ஜோக்காகவே நினைக்கிறேன். இந்த இடத்தில் நான் வேறு ஒன்றையும் சொல்ல வேண்டும். சுகாதார அமைச்சகம் கடந்த இரண்டரை வருடங்களாக எடுத்து வரும் நடவடிக்கைகள் மக்களுக்குப் பலனளிக்கும் காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. தொலைபேசி கட்டணத்தை எட்டணா குறைத்தால் அதன் பலனை உடனே மக்கள் உணர்வார்கள். ஆனால், எங்கள் துறையின் செயல்பாடுகள் அப்படியல்ல. மேலும், உலக அளவில் பெயர் பெற்ற சுகாதார நிறுவனங்கள் எங்கள் பணிகளைப் பாராட்டும்போது, உள்நோக்கத்தோடு வெளிவந்த அந்தக் கருத்துக் கணிப்பைப் பற்றி எனக்குக் கவலையில்லை.''

**திருச்சி மணப்பாறையில் சிறுவன் நடத்திய சிசேரியன் ஆபரேஷன் குறித்து உங்கள் கருத்து?**

''இதற்காகத் தண்டிக்கப்படவேண்டியவர்கள் சிறுவனை சிசேரியன் செய்ய தூண்டிய, டாக்டர்களான அந்தச் சிறுவனின் அப்பாவும், அம்மாவும்தான். சிறுவனைத் தண்டிக்க வேண்டிய அவசியமில்லை.

**சந்திரமுகி படம் வந்தபோது, புகை பிடிக்கும் காட்சிகளில் நடிக்காத ரஜினிக்குப் பாராட்டுத் தெரிவித்திருந்தீர்கள். இப்போது சிவாஜி படம் பார்த்தீர்களா?**

''சிவாஜி படத்திலும் புகை பிடிப்பது,

# -சாடுகிறார் அன்புமணி

# ரசிகர்களைக் கண்டிக்காத ரஜினி!

குடிப்பது போன்ற காட்சிகளில் ரஜினி நடிக்கவில்லை என்று கேள்விப்பட்டேன். இப்படிப்பட்ட படத்தை எடுத்ததற்காக ஏ.வி.எம். நிறுவனத்தைப் பாராட்டு கிறேன். அதே சமயம், தமது கட்-அவுட்டுக் குப் பால் அபிஷேகம், பீர் அபிஷேகம் நடத்துவதைக் கண்டிக்காமல் இருந்திருக் கிறார் ரஜினிகாந்த். இளைஞர்களை நல்வழிப்படுத்தும் அவரது நோக்கம் தூய்மையானது என்றால் இதுபோன்ற செயல்களை அவர் கண்டிக்க வேண் டாமா?''

**பா.ம.க.வுக்கும் திரைப்படத் துறைக் கும் தொடர்ந்து மோதல் இருந்துகொண்டே வருகிறதே?**

''திரைப்படங்கள் சமுதாயத்தை நல் வழிப்படுத்தும் வகையில் எடுக்கப்பட வேண்டும். அரசியலில் மக்களுக்காகவே வாழ்ந்து, தியாகம் செய்தவர்கள் நிறைய பேர் இருக்கிறார்கள். இந்த நிலையில் தமது சினிமா செல்வாக்கைப் பயன் படுத்தி, முதலமைச்சர் ஆகவேண்டும் என்று சில நடிகர்கள் முயற்சிப்பது கண்டிக் கத்தக்கது. துரதிருஷ்டவசமாக, படிப்பறிவு இல்லாத பெரும்பான்மை மக்கள் உள்ள நம் நாட்டில், நடிகர்கள் தங்கள் செல் வாக்கை இப்படித் தவறான வழியில் உபயோகித்து ஏமாற்றுவதை நாங்கள் கடுமையாக எதிர்க்கிறோம். இதை மோதல் என்று திரைப்படத்துறை எடுத்துக் கொண் டால், நாங்கள் அதற்குப் பொறுப்பல்ல.''

**கேரளாவில் சிக்குன் குன்யாவால் மரணம் ஏற்பட்டிருக்கிறது என்று முதல்வர் அச்சுதானந்தன் சொல்ல... நீங்கள் மறுக்க... சர்ச்சை உண்டானதே!**

''எங்கள் துறையைச் சார்ந்த அதிகாரிகள் முழு ஆய்வு நடத்திய பிறகு தெரிவித்த கருத்துதான் அது. இத்தனைக்கும் மத்திய அரசு அதிகாரிகள், மாநில அதிகாரிகளை யும் கலந்து பேசியே இதனை அறிவித் தார்கள். மத்திய சுகாதாரத் துறை அதிகாரி களை நம்பத் தயாராக இல்லை என்று



முதல்வர் அச்சுதானந்தன் சொல்லியிருப் பது குறித்துக் கருத்துச் சொல்ல விரும்ப வில்லை. ஏற்கெனவே, பலவித நோய் களுடன் இருந்தவர்களுக்கு சிக்குன் குன்யாவும் வந்ததால் இறந்து போயிருக்கக் கூடுமே தவிர, சிக்குன் குன்யாவால் மட்டுமே இறந்திருக்க வாய்ப்பில்லை.''

**சுயநிதி மருத்துவக் கல்லூரிகள் கேபிடேஷன் கட்டணம் என்று கொள்ளை யடிப்பதைத் தடுப்பதற்கு மத்திய சுகாதார துறைதான் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும், டெல்லியில் அதற்காகப் போராட் டம் நடத்தவும் தயார் என்றும் தமிழக உயர்கல்வி அமைச்சர் பொன்முடி சொல்லி**

யிருக்கிறாரே?

"தமிழக உயர்கல்வித் துறை அமைச்சருக்கு இது பற்றி எந்த விவரங்களும் தெரியவில்லை என்பதையே இது காட்டுகிறது. மருத்துவக் கல்லூரிகள் எல்லா வசதிகளோடும், போதுமான ஆசிரியர்களோடும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனவா? என்று சரிபார்த்து, கல்லூரி அனுமதிக்காக அரசிடம் சிபாரிசு செய்வதுதான் இந்திய மருத்துவ கழகத்தின் வேலை. இது தவிர, கேபிடேஷன் கட்டணம் விவகாரத்தில் நாங்கள் ஒன்றும் செய்ய இயலாது. 1992-ல் மாநில அரசு இது குறித்து ஆணை போட்டிருப்பதும், அமைச்சருக்குத் தெரியவில்லை. மொத்தத்தில் அமைச்சர் பொன்முடி நிதானம் தவறி உளறியிருக்கிறார். போராட்டம் நடத்தட்டும். டெல்லியில் நானே இடம் ஏற்பாடு செய்து தருகிறேன்."



**கேபிடேஷன் கட்டணம் குறித்த விவகாரம் பா.ம.க.- தி.மு.க. உறவையே ஆட்டிப் பார்க்கிறதே!**

"கூட்டணி கட்சியாக இருந்தால் மக்கள் பிரச்னைகளை எடுத்துப் பேசக் கூடாதா? பா.ஜ.க. ஆட்சியில் பெட்ரோல் விலை உயர்வை எதிர்த்து தி.மு.க. போராட்டம் நடத்தியதே. ஏன், நெய்வேலி பங்கு விற்பனை விவகாரத்தில், ஆதரவை வாபஸ் வாங்க நேரிடும் என்றும் சொல்லப்பட்டதே. துணை நகரம், விமான நிலைய விரிவாக்கம், சில்லறை வணிகம் போன்ற பிரச்னையில், நாங்கள் தொடர்ந்து மக்களுக்காகப் பேசுவோம். மத்திய அரசைப் பொறுத்த அளவில்கூட, ஆதரவு தெரிவிக்கும் இடதுசாரிகள், அரசுக்கு எதிராக போராட்டங்கள் நடத்தி வருகிறார்களே!

**கூட்டணியில் விரிசல் வரும் என்ற எதிர்பார்ப்பில் பா.ம.கவுக்கு அழைப்பு விடுத்திருக்கிறாரே ஜெயலலிதா?**

"கடந்த சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க.வுடன் கூட்டணி வைத்தோம். இப்போது மெஜாரிட்டி இல்லாத நிலையில், தி.மு.க. ஆட்சி தொடர எங்கள் முழு ஆதரவை ஐந்து வருடங்கள் தொடர்ந்து அளிப்போம். அதில் எந்த மாற்றமும்

**கூட்டணிக் கட்சியாக இருந்தால், மக்கள் பிரச்னைகளை எடுத்துப் பேசக் கூடாதா?**

இல்லை. மற்றபடி ஜெயலலிதாவின் அழைப்பு எங்களுக்குள் எந்த மாற்றத்தையும் உண்டாக்காது.

**ஜெயலலிதா, போராட்டம் நடத்துவோம் என்றவுடன் நீங்கள் தேனி, கன்னியாகுமரி, வேலூர், மருதமலை கல்லூரிகளுக்கு அனுமதி கொடுத்து விட்டீர்களாமே!**

"இது தவறான தகவல். இந்தக் கல்லூரிகளில் சில குறைபாடுகளை மருத்துவ கழகம் சொல்லியிருந்தது. பின்னர் அது சரிசெய்யப்பட்டு, மாநில அரசு அதிகாரிகள் டெல்லியில் என்னைச் சந்தித்து விளக்கினார்கள். பின்னர் அனுமதிக்காக விரைந்து ஏற்பாடு செய்யப்பட்டது. மற்றபடி ஜெயலலிதாவின் போராட்ட அறிவிப்புக் குறித்து எனக்கு எதுவும் தெரியாது."

**- ப்ரியன்**

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...






ஆகஸ்ட் 5, ஆண்டு மலர் இதழிலிருந்து ஆரம்பம்...

அமரர் கல்கி எழுதிய

# பார்த்திபன் கனவு

–சிலிர்ப்பூட்டும் சரித்திர நாவல்!



படம் : பொள்ளாச்சி சுந்தரம்

பிரபல சினிமா கலைஞர்கள்
எண்ணங்களை விதைக்கிறார்கள்;
வண்ணங்களைத் தீட்டுகிறார்கள்!
முதலில்...
'இம்சை அரசன் 23-ம் புலிகேசி'
**இயக்குநர் சிம்புதேவன்**

உங்கள் பங்கேற்பு
இதோ தொடங்குகிறது...

## பார்த்திபன்களே வாங்க! வாங்க!!



- உங்கள் பெயர் பார்த்திபனா? பரிசு வாங்க நீங்க ரெடியா?
- நீண்ட நாளைய கனவு இருக்கா?
- அது வீட்டைப் பத்தியும் இருக்கலாம்; நாட்டைப் பத்தியும் இருக்கலாம்!
- சுருக்கமாகப் பத்து வரியில எழுதுங்க!
- உங்கள் பெயருக்கான சான்றிதழ் நகல்+புகைப்படம் இணைக்கவும்!
- சிறந்த கனவுகளுக்கு அசத்தலான பரிசுகள் காத்திருக்கு!
- ஆசிரியர் தீர்ப்பே இறுதி! முடிவு தேதி : 23.7.2007
- உடனே... உடனே... உடனே... அனுப்புங்க!

வித்தியாசமான போட்டிகள் தொடரும்!



# கல்கி



2007 ஜூலை 22
சர்வஜித் ஆடி 6
மலர் : 65
இதழ் : 51

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்றதாயென்று
கும்பிடடி பாப்பா

*- பாரதியார்*

## பயங்கரவாதிகள் பயம் கொள்ளட்டும்!

கிளாஸ்கோ விமான நிலைய தாக்குதல் தொடர்பாகக் கைதான இந்தியர்களை முஸ்லிம் தீவிரவாதிகள் எனக் குறிப்பிட்டபோது, இந்தியப் பிரதமர் ஆட்சேபித்தார்! ஆனால், அவரது ஆட்சேபணை எழுந்த இரண்டே தினங்களுக்குள் பாகிஸ்தானில் இஸ்லாமிய தீவிரவாதிகள் தங்கள் கைவரிசையைக் காட்ட, பாக் பாதுகாப்புப் படை, லால் மஸ்ஜித் என்ற வழிபாட்டுத் தலத்தில் புகுந்து அவர்களைக் கைப்பற்ற முயன்றிருக்கிறது - ஏராளமான உயிர்ச்சேதமும் நிகழ்ந்திருக்கிறது.

இஸ்லாமிய தீவிரவாதம் என்பது இன்று உலகளாவிய பயங்கரமாக வளர்ந்து அச்சுறுத்தி வருவதை மறுக்கவோ, பூசி மெழுகவோ முயற்சி செய்வது நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ளும் செயல்.

கிளாஸ்கோ விமான நிலையத் தகர்ப்பு முயற்சி தொடர்பாக, முகமது ஹனீஃபை விசாரணைக்கு உட்படுத்த விரும்பும் ஆஸ்திரேலிய ஃபெடரல் போலீசுக்கு அவசர அனுமதி மறுத்து, முறையான விண்ணப்பத்தை சி.பி.ஐ. மூலம் அனுப்பும்படி நமது அரசு கூறியிருப்பதும் நல்லதற்கல்ல. சிறுபான்மையினரை 'மகிழ்விக்கும்' அரசியல் யுக்தியை இதுபோன்ற தருணங்களிலும் பிடிவாதமாகக் கைகொள்வது விபரீதங்களுக்கே வழிவகுக்கும். இதுபோன்ற வழக்குகளில் விசாரணைகள் அதிவிரைவில் நடத்தப்படாவிட்டால் சாட்சியங்கள் கலைக்கப்பட்டுவிடும்; குற்றவாளிகள் மிக எளிதில் தப்பிவிடுவர்; நிரபராதிகள் அவதிப்படுவார்கள்.

மேலும், இன்று தீவிரவாதிகளும் பயங்கரவாதிகளும் இஸ்லாமியர்களிடையே மட்டுமா இருக்கிறார்கள்?... நம் நாட்டிலேயே மாவோ தீவிரவாதிகள், நக்ஸல்கள், தனித்தமிழ் இயக்கத் தீவிர

அண்ணே...
மிக்ஸட் டபுள்ஸ்
ஆட பாசத்தோட
காத்திருக்கேன்...




வாதிகள், இலங்கைத் தீவிரவாதிகள் என்று விதம் விதமாகக் காணக் கிடைக்கிறார்கள்.

பொருளாதார, வர்த்தக, சௌகரியங்களுக்காக இணைந்து கொள்கைகள் வகுத்துச் செயல்படும், உலக நாடுகளின் பல்வேறு குழுக்கள் இருக்கின்றன. அவற்றை விடவும் முக்கியமாக, பயங்கரவாத எதிர்ப்புக்கென உலக நாடுகள் ஒன்றுசேர்ந்து புதிய அமைப்பு ஒன்றை உருவாக்க வேண்டும். அதன் மூலமாக, எங்கு பயங்கரவாதம் நிகழ்ந்தாலும், பூகோள எல்லைகள் கடந்து விசாரிக்க, புலனாய்வு செய்ய வழிவகுக்கலாம். பயங்கரவாத அமைப்புகள் தோன்றவும் வன்முறையில் திளைக்கவும் மூலகாரணமாக உள்ள சமூக, பொருளாதார, வரலாற்றுப் பின்னணியை, மத அடிப்படையிலான கூறுகளை ஆராய்ந்து, பிரச்னையை வேரோடு தீர்க்க நீண்டகால நோக்கில் சிந்தித்துச் செயல்படலாம். உடனடித் தேவையாக, ஆட்கொல்லி இயக்கங்களின் தந்திரங்களை முறியடிக்கவும் அவற்றை நேருக்கு நேர் எதிர்கொண்டு வெற்றிகொள்ளவும் பயிற்சி பெற்ற படைக்கலங்களை நிறுவலாம். பயங்கரவாதிகளுக்கு துரிதமாக நீதி வழங்கவும் தண்டனை அளிக்கவும் வழிமுறைகளைத் திட்டமிட்டு உருவாக்கலாம்.

சர்வதேச அளவில் ஒன்றுபட்ட இத்தகைய அமைப்பு ஒன்று இருக்கிறது, இயங்குகிறது என்பதே பயங்கரவாதிகளுக்கு அச்சம் ஏற்படுத்தும்.

உலக நாடுகள் வேறு எந்தத் தளத்திலும் இல்லாத ஒட்டுறவுடன் இத்தளத்தில் ஒன்றுபட்டு இயங்குவதற்கு இன்று வலுவான முகாந்திரம் இருக்கிறது. உலகின் ஏறக்குறைய அனைத்து நாடுகளும் நேரடியாகவோ மறைமுகமாகவோ பயங்கரவாதத்தால் பீடிக்கப்பட்டுள்ளன. இதனால் மனித நேயத்தின் எதிர்காலமும் மனித குலத்தின் எதிர்காலமும் கேள்விக்குறியாகியிருக்கின்றன.

இன்று இந்தியாவில் சிவகங்கை போன்ற சிறு நகரத்தில், அரசியல் விரோத கொலைக்கு ரிமோட் கன்ட்ரோல் கருவி பயன்படுத்தப்படுகிறது. வெகுவிரைவில் அணு ஆயுதங்கள் இதுபோல் புழக்கத்துக்கு வரமாட்டா என்பது என்ன நிச்சயம்? பொறுப்பற்ற வெறியர்களின் கைகளை அவை சென்றடைந்தால், உலகை மீட்பது துர்லபமாகிவிடும்.

அதிகம் தாமதிக்க தருணமில்லை. சர்வதே பயங்கரவாத எதிர்ப்பு கூட்டமைப்பு உடனே தொடங்கப்படவேண்டும். அதற்கு இந்திய அரசு முதல் முயற்சி எடுக்கட்டும்! ●

# வாய் திறக்காமல்

★ அ.முரளீதரன், மதுரை

***திருக்குறள் காமத்துப் பாலில் தங்களைக் கவர்ந்த குறள் எது ?.... ஏன்?***

நீங்கின் தெறூஉம் குறுகுங்கால்
தண்ணென்னும்
தீயாண்டும் பெற்றாள் இவள்.

அவளை நீங்கி விலகிச் செல்லச் செல்ல வெப்பம் கூடுகிறது. இதே அவள் அருகில் வர வர குளிர்ச்சி கூடுகிறது. இத்தகைய அதிசயமான நெருப்பை இவள் எங்கிருந்து பெற்றாள், என்று காமத் தீயின், தெர்மோடைனமிக்ஸைக் கூறும் குறள். இதேபோல இன்னொரு குறளில், 'என்னவள் விழிகளால் இரண்டு விதமான பார்வை பார்க்கிறாள். ஒரு பார்வையால் காமம் என்ற நோயைக் கொடுக்கிறாள். மற்றொரு பார்வையால் அந்த நோய் தீர மருந்தைக் கொடுக்கிறாள்' என்று முரண்பாடான இரண்டு விஷயங்களை முடிச்சுப் போடுகிறார் வள்ளுவர், அறத்துப் பாலிலும், பொருட் பாலிலும் அறிஞனாகக் காட்சியளிக்கும் வள்ளுவர், காமத்துப் பாலில் கவிஞனாகக் கொந்தளிக்கிறார். கவிதைகளைக் குறிப்பாக, காதல் வகையறாக்களை Paradox எனப்படும் முரண்பாட்டு - உத்தி மெருகேற்றும். இந்த விளையாட்டில் காமத்துப்பால் வள்ளுவருக்கு இணையான கிராமத்துப்பால் வல்லவர் நமது வைரமுத்து. ஒரு சோறு உதாரணம், 'நெஞ்சுக்குள் தீயை வைத்து மோகம் என்பாய்; தண்ணீரில் மூழ்கிக் கொண்டே தாகம் என்பாய்', 'கண்ணுக்குள் முள்ளை வைத்து யார் தைத்தது; தண்ணீரில் நிற்கும் போதே வேர்க்கின்றது' போன்ற வரிகள்.



★ பாகேஸ்வரி, வடபழனி

***ஆண்-பெண் இருவரில் யாரிடம் பாராட்டு வாங்குவது கலபம்....?***

பொதுவாக இமோஷனல் டைப்பான பெண்களுக்கு எதிர்பார்ப்புகள் அதிகம். அது சற்றுக் குறைந்தாலும், ஏமாற்றமும் அதிகம். ஒரு வேளை வசிஷ்டர் வாயால் பிரம்ம ரிஷிக்குப் பதிலாக அருந்ததி வாயால் ஆர்டினரி-ரிஷி பட்டத்துக்கு விஸ்வாமித்திரர் மெனக்கெட்டிருந்தால், பாவம் அவர் இன்றுவரை தவம் செய்து செய்து நொந்து போயிருப்பார்....

★ கே.எஸ்.கோவர்த்தனன், வேளச்சேரி

***வாய் விட்டுச் சிரித்தால் நோய் விட்டுப் போகும். வாய் விடாமல் சிரித்தால்....?***

நோய் விட்டு விட்டு தவணை முறையில் போகும். அட சிரிப்பு என்னமோ வந்தாச்சு. அதை ஏன் மனசுக்குள்ள சிரிச்சுக்கறீங்க. மனம் விட்டுச் சிரிங்க சார்.

★ எஸ்.சம்பத், வேலாயுதம்பாளையம்

***எப்போது-எதற்காக-ஏன் அழுதீர்கள்....?***

சூப்பர்-ஸ்டார் ரஜினி நடித்த ஸ்ரீ ராகவேந்திரர் படத்துக்கு எழுதும் பணி முதலில் என்னிடம்தான் கொடுக்கப்பட்டது. இயக்குனர் எஸ்.பி.முத்துராமன்



# சிரித்தால் என்னவாகும்?

அவர்கள் கொடுத்த ஊக்கத்தால் உந்தப்பட்டு, மறைந்த ஹரிகதா மேதை பாலகிருஷ்ண சாஸ்திரிகளிடம் ஒருமாத காலம் 'ஸ்ரீராகவேந்திரர் உபன்யாசம்' கேட்டு திரைக்கதை-வசனத்தை எழுதி முடித்தேன். சில காரணங்களால் என்னால் அந்தப் படத்தில் பங்கேற்க முடியாமல் போய்விட்டது. அழவில்லை.... ஆதங்கத்தை அந்த மந்திராலய மகானிடமே வெளியிட்டேன். பல வருடங்களுக்குப் பிறகு ரஜினி சாரின் அருணாச்சலம் படத்துக்குக் கதை-வசனம் எழுதும்போது, எனது பழைய புலம்பலை அவரிடம் ஒப்பாரி வைத்தேன். ராகவேந்திரர் அருளால அருணாச்சலம் வாய்ப்புக் கிடைச்சிருக்குன்னு பாஸிடிவ்வா எடுத்துக்குங்க என்றார். ரஜனி சொன்ன வார்த்தைகளையே சற்று மாற்றிப் போட்டு 'ஆண்டவன் (ராகவேந்திரர்) சொல்றான் அருணாச்சலம் முடிக்கிறான்' என்ற பன்ச்-டயலாக் எழுதியபோது ஆனந்தக் கண்ணீர் வந்தது.

**★ மிருணாளினி, சென்னை**

***கிரேஸி அது என்ன மூச்சு வாங்கறது ....?***

'அஹம்-ஸஹ' அதாகப்பட்டது நானே-அது என்ற அத்வைத தத்துவத்தை ஓயாமல் ஓதிக் கொண்டிருப்பது மூச்சு. ஒழுங்கான பிராணாயாமப் பயிற்சியால் இதை உணரலாம். நம் உள்ளிருக்கும் இந்த ஆனந்தத்தை அனுபவிக்க வா என்கிறது மூச்சு. இதை வாங்கறது மூச்சு என்று மூச்சு வாக்கில், ஸாரி பேச்சு வாக்கில் சொல்கிறோம்.

படம் : **பொள்ளாச்சி சுந்தரம்**

கிரேஸியைக் கேளுங்கள்



# கல்லூரிக்குப் போகும்

ஊரைக் கூட்டாமல் முரசு கொட்டாமல் இயக்குநர் பாலாஜி ஷக்திவேல் தமது அடுத்த கனவுப் படமான 'கல்லூரி'யின் படப்பிடிப்பை சிவகங்கையில் வேகவேகமாக முடுக்கிக் கொண்டிருக்கிறார்.



காதலில் ஒரு சந்தியா முளைத்ததுபோல கல்லூரியில் அதன் நாயகி தமனா ஏதாவது சாதித்துக்காட்டுவாரா? தமனாவின் பதில் இதோ:

''நான் படத்தைப் பற்றி எதுவும் சொல்ல முடியாத சூழ்நிலை. இப்போது தான் படப்பிடிப்பு தொடங்கியிருக்கிறது. காதல் இயக்குநர் பாலாஜி சக்திவேல் அவருடைய அடுத்த படத்துக்கு என்னை அழைக்கிறார் என்றவுடன் நான் அடைந்த உணர்வுகளை வார்த்தைகளால் வெளிப்படுத்த முடியுமா என்று தெரியவில்லை. சினிமாவின் மகத்துவமே அதன் ஆச்சர்யங்கள்தான். நாளை நடக்கவிருக்கும் அதிசயத்தை உணராமல்தான் எல்லோரும் இன்றைய பொழுதைக் கழித்துக் கொண்டிருக்கிறோம். சிவகங்கையில் கொளுத்தும் வெயிலில் எனக்கு வேறு ஒரு உலகத்தைக் காண்பித்துக் கொண்டிருக்கிறார் பாலாஜி சக்திவேல்'' என்று ஏகத்துக்கும் உணர்ச்சிவசப்படுகிறார் தமனா.

''என் முழுத் திறமையையும் வெளிக்காட்டக் கூடிய ஒரு படத்தில் நான் நடிக்கிறேன் என்பதே இந்த வயதில் நான் அடைந்த பெரும்பேறு. 'கேடி', 'வியாபாரி' ஆகிய இரண்டு படங்களிலும் நிறைய வசனங்கள் பேசியதால் தமிழில் இப்போது நான் சிரமப்படவில்லை. சிவகங்கை மக்களும் மிக அன்பாக நடந்து கொள்கிறார்கள். உதவி என்றால் உடனே ஓடிவருகிறார்கள்'' என்கிற பதினேழு வயது தமனா ஒரு மும்பைவாசி. முதல் தமிழ்ப் படம் கேடி. அதுவும் வில்லி வேடம்.

''கேடி, வியாபாரி படங்கள் ஹிட் ஆகாததில் எனக்குப் பெரிய பாதிப்பு கிடையாது. திரையில் என் முகம் தெரிவதே பெரும் பாக்கியம் அல்லவா! கடந்த இரண்டு வருடங்களாக ஹிந்தி, தமிழ், தெலுங்கு என்று ஓடோடி

# தமனா!

நடித்துக் கொண்டிருக்கிறேன். நிச்சயம் பணம், புகழுக்காக அல்ல; வாழ்க்கை முழுக்க நடித்துக் கொண்டேயிருக்க வேண்டும். திருமணமானாலும்கூட நடிப்பை விடக்கூடாது என்பது என் ஆசை, கனவு.''

தமிழ்சினிமா தம்மை கிளாமர் என்கிற ஊறுகாய்க்கு மட்டும் பயன்படுத்திவிடப் போகிறது என்கிற அச்சம் இருக்கிறது. ''மும்பையில் மேடை நாடகங்களில் நடித்தவள் நான். எப்படி வேண்டுமானாலும் நடிப்பதில் எனக்கு உடன்பாடு கிடையாது. 'முடியாது' என்கிற ஒரு வார்த்தையால் நான் நிறைய பட வாய்ப்புகளை இழந்திருக்கிறேன். எதுவும் அதன் எல்லைக்குள் இருந்தால்தான் அழகு. மும்பை நடிகைகளாலும் திறமையைக் காட்ட முடியும் என்பதற்குத் தமிழ்சினிமாவில் உதாரணங்களைத் தேட வேண்டுமா என்ன!''

இன்டர்நெட், டிஸ்கொத்தே போன்ற நவீன கலாசாரங்கள் இன்னமும் தம்மைத் தாக்கவில்லை என்கிறார் இவர். ''சுயமாக ஒரு ஈ-மெயில் ஐ.டி.கூட கிடையாதாம். ''சினிமாவே வாழ்க்கையாக மாறிப்போனதால் வழக்கமான இளவயது அனுபவங்கள் என்னிடம் கிடையாது. மும்பைப் பெண்ணாக அதுவும் ஒரு நடிகையாக இருந்தும் நான் இதுவரைக்கும் டிஸ்கொத்தே போனது கிடையாது. அங்கே நாலுபேர் மத்தியில் நடனமாடுவதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது. சினிமா கொடுக்கும் அனுபவங்களே வாழ்க்கையை அனுபவிக்கப் போதுமானதாக இருக்கிறது. தமிழில் நல்ல பேர் வாங்கி, அப்படியே ஹிந்தியிலும் நிலைக்க ஆசையிருக்கிறது. எல்லாம் மக்கள் கொடுக்கும் ஆதரவில்தான் இருக்கிறது''என்கிறார் தமனா.

- ச.ந.கண்ணன்



'நாடகங்களுக்கு வாய்ப்புக் குறைந்து விட்டது' என்று பலர் வருத்தம் தெரிவித்துக் கொண்டிருக்கும் வேளையில், முத்ரா சபாவின் சார்பில் சில புதிய முயற்சிகள் நடந்து வருகின்றன. பிரபல நாடக குழுக்களுக்கு விருதுகள், வாய்ப்புகள், நாடக விழாக்கள் என ஆண்டுதோறும் 'நாடக வாரம்' கொண்டாடும் முத்ரா, குழந்தைகளுக்கு நடிப்புச் சொல்லிக் கொடுக்கும் நோக்கத்துடன் நாடகப் பயிலரங்கம் ஒன்றையும் இந்த ஆண்டு நடத்தியது.

''விளம்பரம் மூலமாகவும், தெரிந்த நண்பர்கள் மூலமாகவும் எட்டு வயதிலிருந்து பதினான்கு வயதுக்குட்பட்ட குழந்தைகளைத் தேர்ந்துதெடுத்தோம். பரிக்ஷா நாடகக் குழுவை நடத்தி வரும் பத்திரிகையாளர் ஞாநி, திருநெல்வேலியைச் சேர்ந்த நடிப்புப் பயிற்சி பெற்றவரான ஜெய்சங்கர் இருவரும் இணைந்து இந்தப் பயிலரங்கத்தினை நடத்தினார்கள்'' என்கிறார் முத்ரா பாஸ்கர்.

''ஆரம்பத்தில் சில குழந்தைகள் மிகவும் கூச்ச சுபாவத்துடன் காணப்பட்டனர். எனவே, அனைவரையும் ஒரு வட்டமாக நிறுத்தி வைத்து, ஒவ்வொருவரையும் தங்களைப் பற்றிச் சிலவரிகள் சொல்லி அறிமுகப்படுத்திக் கொள்ளச் சொன்னார்கள். அதனைத் தொடர்ந்து ஒவ்வொருவருக்கும் ஒரு கேரக்டரையும், ஒரு சூழ்நிலையையும் சொல்லி, அதனை நடித்துக் காட்டவும் சொன்னார்கள். இன்னொரு சுவாரசியமான கட்டம் கண்ணாடிப் பிம்பம் என்ற பயிற்சி. இதில் பயிற்சியாளர் முதலில் சந்தோஷம், சோகம், சிரிப்பு என்று ஆரம்பித்து புலி, சிங்கம் வரை பல்வேறு முக பாவங்களையும் செய்துகாட்ட, அந்தப் பாவங்களை கண்ணாடிப் பிம்பம் போல குழந்தைகள் செய்துகாட்ட வேண்டும். இந்தக் கட்டத்தில் எல்லா குழந்தைகளும் கூச்சத்தை முற்றிலுமாக விட்டுவிட்டு,

# குதூகலத்தி



* பயிற்சி பட்டறையில் ஞாநியுடன் குழந்தைகள்...



அடுத்து, அவர்களாகவே ஒரு கதையை எடுத்துக்கொண்டு அதனை நடிக்க வேண்டும் என்று சொல்லப்பட்டது. கூடிப் பேசி, பல கதைகளை அலசி, கடைசியில் ஒன்றைத் தேர்வு செய்தார்கள். காட்டில் ஒரு புலி அடிபட்டு இறந்து கிடக்கிறது. அந்தப் பக்கமாக ஒரு டாக்டர், ஒரு விஞ்ஞானி, ஒரு சாதாரண மனிதன் மூவரும் வருகிறார்கள். டாக்டர், ''இந்த அடிபட்ட புலிக்கு நான் சிகிச்சை அளித்து குணப்படுத்துகிறேன்'' என்கிறார். விஞ்ஞானியோ, ''இறந்த புலிக்கு உயிர் கொடுக்கிறேன்'' என்கிறார். சாதாரண மனிதர் ''என்னால் ஒன்றும் செய்ய இயலாது'' என்று சொல்லிவிட்டு அந்த இடத்திலிருந்து ஓடிப்போய், பக்கத்தில் இருந்த ஒரு

# குட்டிக் கண்ணாடிகள்!

தாங்கள் இருக்கும் சூழ்நிலையை மறந்து, முழுமையாக முகபாவங்களைக் காட்டியது குறிப்பிடத்தக்கது'' என்கிறார் ராதா பாஸ்கர்.

அடுத்த கட்டமாக நாலைந்து குழந்தைகள் சேர்ந்து மரம் மாதிரி நிற்க, இன்னும் சிலர் ஒரு குடிசை மாதிரி நின்று கொண்டார்கள். காகமும் நரியும் கதைதான்... ஆனால், இந்தக் காகமோ வெகு புத்திசாலி. நரி அதனைப் பாடும்படி சொன்னதும், ''எனக்கு உடம்பு மிகவும் களைப்பாக உள்ளது; இந்த வடையை சாப்பிட்டுவிட்டு, அதன் பின் உற்சாகமாகப் பாடுகிறேனே'' என்று சொல்லி வடையைச் சாப்பிட்டதும், நரி ஏமாந்தது. இந்தக் கதையை நடித்துக் காட்டிய குழந்தைகள் மத்தியில் குழு மனப்பான்மை உருவாகி விட்டதை உணர முடிந்தது.

மரத்தில் ஏறிக் கொண்டு, கீழே நடப்பதை கவனிக்கிறார். சிறிது நேரத்தில், டாக்டர் புலியின் காயங்களைக் குணப்படுத்த, விஞ்ஞானி அதற்கு உயிர் கொடுக்க, உறுமியபடியே எழுந்திருக்கிறது புலி. அதனிடமிருந்து தங்கள் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள ஓட்டம் பிடிக்கிறார்கள் இருவரும். 'இந்தக் கதையை அந்தக் குழந்தைகள் மேடையேற்றிய போது, 'இவர்களுக்குள்ளே இவ்வளவு திறமையா?' என்று ஆச்சரியமாக இருந்தது'' என்கிறார் ராதா பாஸ்கர்.

''சென்னை மாநகராட்சி பள்ளிகளில் படிக்கும் மாணவர்களுக்கு இத்தகைய நடிப்பு மற்றும் பாட்டு பயிலரங்கம் நடத்தப்போகிறோம். சுமார் பத்தாயிரம் பள்ளி மாணவர்களைக் கொண்ட ஒரு சேர்ந்திசை நிகழ்ச்சியை நடத்தும் திட்டமும் உள்ளது'' என்கிறார் முத்ரா பாஸ்கர்.

– எஸ்.சந்திரமௌலி




# உயரம் கூட்டும் எலும்புச் சிகிச்சை!

"முன்பெல்லாம் கால் எலும்பு அல்லது கை எலும்புப் பகுதிகளில் புற்றுநோய் (கான்சர்) வந்தால் அப்படியே காலையோ, கையையோ முழுதாக எடுத்து விடுவார்கள். இப்போது பாதிக் கப்பட்ட எலும்புப் பகுதியை மட்டும் எடுத்துவிட்டு, அங்கே உலோக இணைப்பு அல்லது வேறு எலும்புத் துண்டு வைத்து இணைத்து விடுகிறோம். புற்று நோய் வேறு இடத்துக்குப் பரவா மல் இருக்க, கீமோதெரபி சிகிச் சையும் கொடுக்கிறோம்'' என் கிறார் பிரபல எலும்புச் சிகிச்சை நிபுணர் டாக்டர் மயில்வாகனன் நடராஜன்.

''பிளட் பாங்க், புக் பாங்க் மாதிரி இப்போது போன் பாங்க் கும் (எலும்பு சேமிப்பு வங்கி) நடைமுறையில் இருக்கிறது. விபத்துகளில் மரணமடையும் நபர்களின் எலும்புகளைப் பதப் படுத்தி, பெங்களூர் கித்வாய் மையத்துக்கு அனுப்பி, இர்ரேடி யேஷன் (தூய்மை) செய்த பிறகே எலும்புப் பகுதிகளைப் பயன் படுத்துகிறோம்.

'இடுப்பெலும்பு மாற்று அறுவைச் சிகிச்சையிலும் இப் போது மாற்றங்கள் வந்துவிட் டன. இதை ஹிப் ரீசர்ஃபேஸிங் என்போம். தேய்ந்துபோன பகுதியை மட்டும் மாற்றி விடு கிறோம். இதனால் தரையில் சப் பளம் போட்டு உட்கார முடியும்.

அதேபோல முழங்கால் மூட்டு மாற்று அறுவைச் சிகிச் சையிலும் High Flex Knees முறை வந்துவிட்டது. 90 டிகிரி முதல் 130 டிகிரி வரை காலை மடக்க லாம்.

முழங்கால் மூட்டு அறுவைச் சிகிச்சையிலும்கூட கீஹோல்

சர்ஜரியில், மூட்டுப் பகுதியில் கிழிந்து போன ஜவ்வு மட்டும் அகற்றப்பட்டு, மாற்று மூட்டைப் பொருத்து கிறோம். தோள் பட்டை, இடுப் பெலும்பு மாற்று அறு வைச் சிகிச்சையிலும் கூட இந்தக் கீஹோல் சர்ஜரி என்ற டெலஸ் கோபிக் அறுவைச் சிகிச்சை முறை கையா ளப்படுகிறது.



தொடை எலும் பில் முறிவு ஏற்பட் டால் உடைந்த இடத் தைத் தொடாமல், தொடை மேலே துளை போட்டு, எலும்புக்குள் ஓர் உலோக இணைப்புப் போட்டு, ஸ்க்ரூ வைத்து சேர்த்து விடுகிறோம். மறுநாளே வீட்டுக் குப் போய்விடலாம்!

இதேபோல, இடுப்பெலும்பு மற்றும் முழங்கால் மூட்டு மாற்று அறுவைச் சிகிச்சைகளில் (ஹிப்/நீ ரீப்ளேஸ்மென்ட்) 'மினிமலி இன்வேஸிவ்' எனப்படும் முறையைக் கையாளுகிறோம். கம்ப்யூட்டர் மற்றும் ரோபோ கருவிகள் எந்த இடத்தில் அறுக்க வேண்டுமோ, அங்கே துல்லியமாக 'கட்' பண்ணி எடுத்துவிட உதவுகின்றன.

மிகக் குள்ளமாக (ட்வார்ஃப்) இருப் பவர்களுக்குத் தங்கள் காலின் நீளத்தை 'எலி சாராவ் முறை' எனப்படும் ரஷ்ய சிகிச்சை முறையில், ஆறு அங்குலம்வரை உயரத் தைக் கூட்ட முடியும்.

'ஆஸ்டியோபொரோ ஸிஸ் வருவதற்குக் கார ணம், எலும்புகளின் தேய் மானம்தான். 35 முதல் 50 வரையிலான வயதுகளில், உடலின் சில பகுதிகளில் தேய்மானம் தெரியத் தொடங்கு கிறது. இதற்கு கால்ஷியம் குறைவும் ஒரு காரணம். பெண்கள், குழந்தைகள் உட்பட குறைந்த பட்சம் அரைமணி நேரமாவது உடற் பயிற்சி செய்ய வேண்டும்.

* டாக்டர் மயில்வாகனன் நடராஜன்



தரையில் உட்கார முடியாமை; முட்டி போட முடியாமை போன்ற பிரச்னை ஏற் படும்போது, அதற்குத் தகுந்த மாதிரி நாற் காலியில் அமருவதோ, பாத்ரூமில் மேற் கத்திய முறையை மேற்கொள்ளுவதோ தான் சரியாக இருக்கும்.

இன்னும் பத்து ஆண்டுகளில், கால் களோ கைகளோ இழந்தால், அவற்றையும் மாற்று அறுவைச் சிகிச்சை மூலம், இரத்தக் குழாய், எலும்பு எல்லாம் இணைத்து, செயல்பட வைக்க முடியும்! இந்த ட்ரான்ஸ்பிளான்டே ஷன் முறை இப்போதே சைனாவிலும், மலேஷியா விலும் வந்துவிட்டது'' என் கிறார்.

**- சாருகேசி**

இரண்டையுமே 'ஆம்பிளைச் சிங்கமாகப் பெற்றுப் போட்டு விட்டதில் தையல் நாயகிக்குத் தலையில் ஒரு முழு நெல் மூட்டை அளவு கனம் உண்டு. 'கல்யாணம் காச்சி'களில் எதிர்ப்படும் பெண்கள், ''எத்தினி புள்ளையடியம்மா உனக்கு...'' என்று கேட்டால், ''ரெண்டு தான்... ஆனா, ரெண்டுமே வரும்படி...'' என்று சொல்லிவிட்டுப் பூடகமாய்ப் பார்ப்பாள். புரியாமல் யாராவது விழித்தால், எல்லோருக்கும் கேட்கும்படியாய் உரக்கச் சொல்வாள்.

''ஆம்பிளைப் புள்ளைங்கன்னேன்...'' என்பாள். தையல்நாயகியைப் பொருத்த அளவில் பெண்பிள்ளைகள் செலவுக்காகவே பிறப்பவை.

சீக்காளியும், பொட்டைப் புள்ளையும் ஒண்ணுதாண்டி... பொழுது விடிஞ்சி பொழுது போனா கருக்குப் பையை உதறி உதறிக் கட்டிக்கிட்டுக் கெடக்கணும்...'' தையல்நாயகியின் இந்தப் பொன்மொழிகள் ரொம்பவே பிரபலமானவை.

**தை**யல்நாயகியின் 'வரும்படிகள்' இருவரும் அவளுடைய போஷாக்கால், பொங்கி வழிய தடித்த உடம்புகளோடு, நாளொரு கிலோவும் பொழுதொரு பவுண்டுமாய் வளர்ந்து வந்து கொண்டிருந்தனர்.

ஒரு நாள் திடீரென தன் மகன்கள் இருவருக்கும் காது குத்தப் போவதாக அறிவித்தாள். ஏற்பாடுகள் வெகு விரைவில் தொடங்கின.

எப்போதுமே மந்தகதியில் இயங்கிக் கொண்டிருக்கும் தையல்நாயகியின் கணவன் செல்லதுரைக்கு, அவளது ஒவ்வொரு சொல்லும் ஈட்டியாகப் பாய, ஒரு வித்தியாச விஸ்வரூபம் எடுத்து எல்லோருக்கும் பத்திரிகை விநியோகித்தான். பத்திரிகையோடு பணம் பாக்கும் வைத்தான். அந்தப் பணம் பாக்கில் மறைந்து நிற்கும் மற்றொரு செய்தியும் உண்டு. மொய்யா இருந்தால் ஆயிரம் ரூபாய் அல்லது குறைந்த பட்சம் கால் பவுனாவது எடுத்து வைக்க வேண்டும்.



# தொலைந்து போன மோ...

காதணி விழாவின் முதல் நாளன்று விழாவுக்கான பொறுப்புகளைப் பகிர்ந் தளிப்பது குறித்து, தீவிரமான சிந்தனை வயப்பட்டிருந்தாள் தையல் நாயகி.

எல்லா ஏற்பாடுகளையும் கன கச்சித மாகச் செய்திருந்தாலும் மொய் வசூல் யார் பொறுப்பு என்பதில் நிறைய சிக்கல் எழுந் தது. காசுபணம் போன்ற விஷயங்களில் யாரையும் அவ்வளவு சீக்கிரத்தில் நம்ப மாட்டாள் தையல்நாயகி.

திடீரென முகம் மலர்ந்தவள் செல்ல துரையிடம், ''பீரோவில் இருக்கற அந்த ஊதா கலர் பையை எடுத்தாங்க. அதான் மொய் வசூல் பை...'' என்றாள்.

# திருவையாறு பாலகுமார்



நாலைந்து வருடங்களுக்கு முன்பு தீபாவளிக்குத் துணிகள் வாங்கியதில், இலவசமாகக் கிடைத்த 'ஜிப்' வைத்த மிகப் பெரிய பை அது. தையல் நாயகியின் 'தீர்க்க தரிசனத்தை மெச்சியபடி செல்லத்துரை அதைக் கொண்டு வர,

''கூட்டம் பந்திக்குப் போன உடனே நாகூர் அத்தான் கையிலே இதையும் மொய் நோட்டையும் கொடுக்கணும். நான் மறந்தாலும் நீங்க மறக்காதீங்க'' என்றாள். நாகூர் அத்தான் வேறு யாருமல்ல; செல்லதுரையின் சொந்த அண்ணன் தங்கதுரைதான். வீட் டோடு மாப்பிள்ளையாக நாகூருக் குப் போய், அங்கேயே நிரந்தர மாய்த் தங்கிவிட்டவர். இரண்டு பெண் குழந்தைகள் இருக்க, மனைவியை இழந்தவர். தையல்நாயகி என்றுமே நாகூர் அத்தானை மதித்த தில்லை. அதற்கு மூன்று காரணங்கள் உள்ளன. ஒன்று அவருக்கு இரண்டு பெண் குழந்தைகள்; எந்நேரமும் அவர் மேல் வீசும் சுருட்டு நாற்றம் இரண் டாவது காரணம்; மூன்று அவர் நேர்மை நியாயம் பற்றிப் பிரசங்கம் பண்ணு

# திரம்!

வது. என்றாலும் மொய் வசூலை அவர் பொறுப்பில் விட தையல் நாயகி முடிவு செய்யக் காரணமாக இருந்ததும் இந்த மூன்றாவது விஷயம்தான்.

**கா**தணி விழா நாள்-

முதல் ஆளாக வந்தவரே நாகூர் அத்தான்தான்! தையல்நாயகி அடுத்த கணம் அவர் முன் பிரசன்னமானாள்.

''ஏன் அத்தான் பிள்ளைகளை அழைச்சிட்டு வரலே...''

''பள்ளிக்கூடம் இருக்கேம்மா...''

''என்னதான் அப்படிப் பள்ளிக் கூடமோ? நல்ல நாளு... பெரிய நாளுன்னு அழைச்சிட்டு வந்தாதானே பேசிப் புழங்கி ஒட்டுறவா இருக்க முடியும்.''

தையல்நாயகியின் இந்தப் புதுப் பாசத்தில் திளைத்து மூழ்கிய நாகூர் அத்தான், ''போயி மத்தவங்களையும் கவனிம்மா...'' என்றார்.

மனசே இல்லாமல் அந்த இடத்தை விட்டு அகன்றாள் தையல்நாயகி.

விழா முடிந்து கூட்டம் பந்தியை நோக்கி நகர, தையல்நாயகி ஊதாப் பை மற்றும் நோட்டுப் புத்தகங்களுடன் நாகூர் அத்தானிடம் ஓடி வந்தாள்.

''நாளைக்குப் புதுக்கோட்டையில ஒரு கல்யாணம். அதுவும் 'பணம்பாக்கு'தான். நான் உடனே கிளம்பியாகணும். வேற யாரையாவது செய்யச் சொல்லும்மா...'' என்று துள்ளினார் அவர்.

தையல்நாயகியின் முகம் உடனடியாக வாடிப்போனது.

''வீட்டுக்கு மூத்தவங்க நீங்க. பொறுப்பா, இதெல்லாம் நீங்கதானே செய்யணும். எங்களுக்கு வேற யாரு இருக்கா சொல்லுங்க...'' என்று கண் கலங்க, நாகூர் அத்தான் கொஞ்சமும் யோசிக்காமல் பையைப் பிடுங்கிக் கொண்டு மொய்பிடிக்க ஓடினார்.

தையல்நாயகி பந்திக்கும், மண்டபத் துக்குமாய் வலம் வந்தாலும், மொய் வசூல் பக்கம் ஒரு கண்ணை வைத்திருந்தாள். தையல் நாயகி தன் சொந்த பந்தங்களுக்கு நிறைய செய்து வைத்திருந்தாள். அத் தனையும் விடுபடாமல் 'சப்ஜாடா' வந்து சேரவேண்டுமென உள்ளூர ஒரு கவலை அவளுக்கு இருந்துகொண்டே இருந்தது.

அவள் போட்டிருந்த கணக்குப் பிரகாரம் மொத்தம் பத்துப் பவுனாவது வர வேண்டும். பணம் தனிக் கணக்கு.

**வி**ழாவுக்கு வந்தவர்கள் விடை பெற்றுச் சென்றுகொண்டே இருக்க, மண்டபம் வெறிச்சோடிய பின் வசூலான நகைகளை தையல்நாயகி ஜாக்கிரதையாக வாங்கிக் கொள்ள, நாகூர் அத்தான் பணப் பையுடன் வீடு வந்து கணக்கை அவளிடம் ஒப்படைத்தார். பிறகு அவர் புதுக் கோட்டை கல்யாணத்துக்கு அவசரமாய்க் கிளம்பும்போது மணி இரவு பதினொன்று.



**தை**யல்நாயகி, ரகசியமாய் மீண்டும் ஒருமுறை மோதிரங்கள் ஒவ்வொன்றாய் எடுத்துச் சரிபார்த்தாள்!

தையல்நாயகி ரகசியமாய் மீண்டும் ஒரு முறை மோதிரங்களை ஒவ்வொன்றாய் எடுத்துச் சரிபார்த்தாள். ஒன்று குறைந்தது. நோட்டுப் புத்தகத்தில் எழுதி இருந்த அரைப் பவுன் மோதிரங்கள் மொத்தம் பதினேழு; பையில் இருந்ததோ பதினாறு. மீண்டும் மோதிரங்களை எண்ண, நிச்சய மாக ஒன்று குறைந்தது.

தையல்நாயகியின் கோபம் உடனடி யாக நாகூர் அத்தான் மேல் திரும்பியது.

''நல்லவன் போல வேஷம் போட்டுத் திருடிட்டான் பாத்தியா... பொண்ணு

கல்யாணத்துக்கு நகை சேர்க்கணும்னா போய்ப் பிச்சை எடுக்க வேண்டியதுதானே! அதுக்கு நானா கிடைச்சேன்...''

செல்லத்துரை, ''அவசரப்படாத தையலு...'' என்றான்.

''உங்களுக்கென்ன எழவு தெரியும்... அரைப்பவுனுன்னா சும்மாவா...? ஒருத்திக் குத் தோடு மூக்குத்தி கணக்காச்சில்ல..''

செல்லத்துரை இங்கிட்டும் அங்கிட்டு மாய் அலைய, தையல்நாயகி நாகூர் அத்தானைத் தேடிப் போனாள்.

''பதினேழு மோதிரம் எண்ணி சரி பாத்துட்டுதானே உங்கையில கொடுத் தேன். நல்லா தேடிப் பாரும்மா...'' என்றார் அவர்.

''நாலைஞ்சு தடவை எண்ணிட்டேன்... பதினாறுதான் இருக்கு... என்றாள் தையல் நாயகி.

நாகூர் அத்தாவின் முகபாவம் விவரிக்க முடியாத சாயலுக்குச் சென்று மீண்டது. பிறகு 'சட்டென' தன் சட்டைப் பைக் குள்ளிருந்து அந்த அரைப்பவுன் மோதி ரத்தை எடுத்துக் கொடுத்துவிட்டு, 'விடு விடு'வென புதுக்கோட்டைக்குச் செல்லும் கடைசி பஸ்ஸைப் பிடிக்க விரைந்தார்.

**கா**தணி விழா நடந்த அன்று இரவு மோதிரங்களைச் சரிபார்க்கையில் தையல் நாயகியின் அஜாக்கிரதையால், பாய் விரிப்புக்கு அடியில் சிக்கித் தொலைந்து போன மோதிரம், அடுத்த நாள் காலையில் வீடு பெருக்கும்போது அவள் கையிலேயே கிடைத்துவிட்டது. இது தையல்நாயகி மட்டுமே அறிந்த ரகசியம்.

புதுக்கோட்டை கல்யாணத்தில் மாப் பிள்ளைக்குத் தான் அணிவிக்க இருந்த மோதிரத்தைத்தான் நாகூர் அத்தான் தன் சட்டைப் பையில் இருந்து அன்று இரவு எடுத்துக் கொடுத்து விட்டுச் சென்றார் என்பது அவர் மட்டுமே அறிந்த ரகசியம். ●

## திருத்தமான கேரக்டர்!

'தூத்துக்குடி' படம் தந்த வெற்றி, ஹீரோ ஹரிகுமாரை தைரியமாக ரிஸ்க் எடுக்க வைத்திருக்கிறது. அடுத்து பண்ணும் 'திருத்தம்' படத்தைப் பற்றி நம்மிடம் விலாவாரியாகப் பேசினார்...

* தூத்துக்குடி படத்திலிருந்து மாறுபட்டு இருக்க வேண்டுமென்பதற்காக பல கதை களைக் கேட்டு இறுதியாக ஒப்புக் கொண்ட படம் திருத்தம்.

* இந்தப் படத்தின் கதையை உருவி னால் கேரக்டர் செத்து விடும். கேரக்டரை மாற்றினால் கதை கலைந்துவிடும்.

* 'வெயில்' நாயகி பிரியங்காவை கேரளாவிலிருந்து வரவழைத்துக் கதையைச் சொன்னோம். உடனே ஒப்புக் கொண்டார்.

* நடிக்க வந்த நாசர் ஹீரோவின் கெட் டப்பைப் பார்த்து அசந்து விட்டார். பல வேஷங்களைப் புனைந்துள்ள நாசரையே அசர வைத்த பாத்திரம் ஹீரோவுடையது.

– கண்ணம்மா



# நேற்று பியூன்...

**டெல்லியிலிருந்து ஓர் உலகளாவிய குழுவினருடன் புறப்பட்டு, இமயமலைப் பயணம் மேற்கொண்டது மறக்க முடியாத த்ரிலான அனுபவம்!**



பெங்களூரில் உள்ள ஃபேஷன் டெக்னாலஜி கல்லூரியில் திங்கட் கிழமை ஒரு ஃபேஷன் ஷோ. அப்போது ஏராளமான வண்ணப்படங்கள் கொண்ட இரண்டு புத்தகங்கள் வெளியிடப்பட வேண்டும். 'நம் கல்லூரிக்கு இது கௌரவப் பிரச்னையாயிற்றே! எப்படிச் செய்து முடிப்பது?' என்று வெள்ளிக்கிழமை மாலை வரை நிர்வாகிகள் தலையைப் பிய்த்துக்கொண்டிருந்தார்கள். சனிக்கிழமை ஒரு மேஜிக் நடந்தது. ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் இரண்டு புத்தகங்களும் அச்சாகி, கல்லூரியில் டெலிவரி செய்யப்பட்டுவிட்டன. ''உங்கள் அச்சகத்தின் பெயரைப் போலவே வேலையிலும் படு ஃபாஸ்ட்தான்'' என்று மனம் நெகிழ்ந்து நன்றி கூறினார்கள் ஃபேஷன் ஷோ நிர்வாகிகள். இந்த நன்றிக்குரியவர் சென்னை வேளச்சேரியில் 'பிரின்ட் ஃபாஸ்ட்' என்ற அச்சகத்தை நடத்தி வரும் முத்துக்குமார்.

''சனிக்கிழமை காலை அச்சிடப்பட வேண்டியவற்றை விமானத்தில் எடுத்துக்கொண்டு எங்களிடம் வந்தார்கள். மடமடவென்று வேலை நடந்தது. ஞாயிற்றுக்கிழமை முற்பகலில் இரண்டு புத்தகங்களையும் அச்சிட்டு முடித்து பேக் பண்ணி, அன்று மதியமே கையோடு விமானத்தில் அவை பெங்களூருக்கு எடுத்துச் செல்லப்பட்டு விட்டன'' என்று மேஜிக்கின் சூட்சமத்தைப் போட்டு உடைக்கிறார் முத்துக்குமார். கடைசி நிமிடத்தில் வேலைகள் தரப்பட்டாலும், அவற்றைக் குறித்த நேரத்தில் சிறப்பாகச் செய்து முடிக்கும்போது வாடிக்கையாளர்களுடனான உறவில் 'நன்னம்பிக்கை' என்ற ஃபெவிகால் சேர்ந்து இன்னும் உறவு ஸ்ட்ராங் ஆகிறது'' என்கிறார்.

'' 2010ல் சென்னையில் நம்பர் ஒன் அச்சகம்; 2015ல் தமிழ்நாட்டில் நம்பர் ஒன், 2020ல் இந்தியாவின் முன்னணி அச்சகங்களில் ஒன்றாக இடம் பிடிப்பது'' - இப்படி தமது இலக்குகளை அடுக்கிக்கொண்டே போகும் முப்பத்தைந்து வயது முத்துக்குமார், பிறந்து வளர்ந்தது எல்லாம் சிதம்பரம் தாலுகாவில் உள்ள ஒரு சிறு கிராமத்தில். ''சிதம்பரம் அரசுக் கல்லூரியில் இரசாயனத்தில் பட்டப்படிப்பை முடித்துவிட்டு, வேலை தேடி சென்னைக்கு வந்தபோது ஏமாற்றமே மிஞ்சியது. ஓர் ஆபீசில் முன்னூறு ரூபாய் சம்பளத்துக்குப் பியூனாகச் சேர்ந்



தேன். ஒரு பிரபல நிறுவனத்துக்கு நேர் முகத் தேர்வுக்குச் சென்றபோது சரளமாக ஆங்கிலத்தில் பேசத் தெரியவில்லை' என்பதால் நேர்முகத் தேர்வில் அனுமதி இல்லை.

ஓர் அச்சகத்தில் பியூனாக வேலை கிடைத்தது. அங்கே அச்சுத் தொழிலில் எனக்கு ஆர்வம் ஏற்பட்டது. ஒரு ஷாம்பூ கம்பெனியில் மார்க்கெட்டிங் வேலையைப் பார்த்துக்கொண்டே, வீட்டிலிருந்தபடி ஸ்கிரீன் பிரிண்டிங் தொழிலை ஆரம்பித்தேன். அடுத்து கெமிக்கல் பொருட்களை விற்கும் ஒரு ஏஜென்சியில் சேர்ந்தேன். அங்கே இருந்த என் மேலதிகாரி, ஒரு கம்பெனியில் உயர் அதிகாரியைச் சந்திக்கும்போது எப்படி அறிமுகப்படுத்திக் கொள்ள வேண்டும்; எப்படிக் கை குலுக்க வேண்டும் என்பதில் ஆரம்பித்து, எனக்கு ஏராளமான விற்பனை நுணுக்கங்களைக் கற்றுக்கொடுத்தார். அதன் மூலமாக என்னுடைய தாழ்வு மனப்பான்மை ஒழிந்தது. வேளச்சேரியில் அச்சகங்களுக்குத் தேவையான பேப்பர் விற்பனை என்று சிறு அளவில் தொழிலை ஆரம்பித்தேன். நானே பல்வேறு அலுவலகங்களுக்கும் சென்று பிரின்ட்டிங் ஆர்டர்களை வாங்கி என்னிடம் பேப்பர் வாங்க வருகிற அச்சகங்களுக்கே கொடுத்து அச்சிட்டு சப்ளை செய்தேன். ஒரு கட்டத்தில் நானே சொந்தமாக அச்சகம் ஒன்றை ஆரம்பித்தேன். வாடிக்கையாளர்களின் ஆதரவு பெருகியது. கடுமையான திட்டமிட்ட உழைப்பின் காரணமாக பிசினஸ் பெருகி, இன்று ஐ.எஸ்.ஓ. தரச்சான்று பெற்ற ஒரு அச்சகத்தை வெற்றிகரமாக நடத்திக் கொண்டிருக்கிறேன்'' என்று தமது வெற்றிப் பயணத்தைச் சுருக்கமாகச் சொல்லும் முத்துக்குமாருக்கு நீண்ட தூரம் மோட்டார் சைக்கிளில் அட்வெஞ்சர் ட்ரிப் செல்வது மிகவும் பிடிக்கும். ''டெல்லியிலிருந்து ஓர் உலகளாவிய குழுவினருடன் புறப்பட்டு, இமயமலைப் பயணம் மேற்கொண்டது ஒரு மறக்க முடியாத த்ரில்லான அனுபவம்'' என்கிறார்.

''வாழ்க்கை என்பது வாழ்வதற்கே! நாம் வாழும் வாழ்க்கை நமக்கு மகிழ்ச்சி அளிக்க வேண்டும்; அதேசமயம் இந்தச் சமூகத்துக்கும் உபயோகமாக இருக்க வேண்டும் என்று நான் நினைக்கிறேன். அண்மையில்கூட வேளச்சேரி பகுதியில் இரண்டு சக்கர வாகன ஓட்டிகள் ஹெல்மெட் அணிய வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தி ஒரு நிகழ்ச்சியை நடத்தினோம். வசதியற்ற மாணவர் ஒருவர் இன்ஜினியரிங் கல்லூரியில் படிக்க உதவி செய்துகொண்டிருக்கிறோம். என்னுடைய அச்சகத்தில் இலாபக் கணக்கைவிட, என்னால் மற்றவர்களுக்குச் செய்ய முடிந்த உதவிகளின் பட்டியல்தான் எனக்கு அதிக மகிழ்ச்சியை அளிக்கிறது'' என்று வாழ்க்கைக் கணக்கையும் மிகச் சரியாகப் போடுகிறார் முத்துக்குமார்.

– எஸ்.சந்திரமௌலி



# இன்று முதலாளி!

'ஸ்க்ராபிள்' (Scrabble) என்ற பிரபல ஆங்கில வார்த்தை விளையாட்டை ஏற்கெனவே விளையாடி மகிழ்ந்தவர்களுக்கு இதோ மீண்டும் ஒரு மகிழ்ச்சியான செய்தி.

''தமிழிலும் இதேபோன்ற ஒரு விளையாட்டை வடிவமைக்கும் முயற்சியில் இறங்கி, அதில் வெற்றியும் கண்டிருக்கிறார்கள் ராஜாகுமார் - சுதா ராஜாகுமார் தம்பதி.

ஸ்க்ராபிள் குறித்து அறியாதவர்களுக்கு ஒரு சின்ன அறிமுகம். இது ஓர் அட்டை (board) விளையாட்டு. போட்டியாளர்கள் ஒவ்வொருவரிடமும் மரம் அல்லது பிளாஸ்டிக்கினால் ஆன சில வில்லைகள் அளிக்கப்படும். ஒவ்வொரு வில்லையிலும் ஓர் ஆங்கில எழுத்து இருக்கும். அதற்குக் கீழே அதற்கான மதிப்பும் (பெரும்பாலான வார்த்தைகளில் எளிதாக இடம் பிடிக்கும் A,E போன்ற எழுத்துகளுக்கு மிகக் குறைவாகவும் Q,Z போன்ற எழுத்துகளுக்கு மிக அதிகமாகவும்) குறிக்கப்பட்டிருக்கும்.

முதலில் விளையாடுபவர் தன்னிடம் இருக்கும் எழுத்துகளைக் கொண்டு, எவ்வளவு வார்த்தைகளைத் தொடர்ச்சியாக அமைக்க முடியுமோ, அவ்வளவு வார்த்தைகளை அமைக்கலாம். அமைத்த வார்த்தைகளுக்கான வில்லைகளில் உள்ள கூட்டுத் தொகை அவருக்கானப் புள்ளிகள் என எடுத்துக் கொள்ளப்படும். இப்போது அடுத்தவர் ஆட வேண்டும். ஏற்கெனவே அட்டையில் உள்ள எழுத்து ஒன்றை அடிப்படையாகக் கொண்டு, தனது வார்த்தைகளை அமைக்க வேண்டும். இப்படியே கையில் உள்ள வில்லைகள் தீரும் வரை ஆட வேண்டும். மொத்தத்தில் அதிக புள்ளிகள் எடுத்தவரே வென்றவர் ஆவார்.

தமிழில் இப்படி ஒரு விளையாட்டை வடிவமைப்பதில் உள்ள சிரமங்களைப் பட்டியலிடுகிறார் ராஜாகுமார்.

''ஆங்கிலத்தில் இருபத்து ஆறு எழுத்துகள்தான். தமிழிலோ இருநூற்று நாற்பத்தேழு அவ்வளவு வில்லைகளை வடிவமைத்தால் ஆட்டம் சுவாரஸ்யமாக இருக்காது. எழுத்தைத் தேடுவதற்கே நேரம் அதிகமாகும்.

இது தொடர்பாக நிறைய ஆராய்ச்சி செய்ய வேண்டியிருந்தது. சுமார் எண்பதாயிரம் தமிழ் வார்த்தைகளை ஆராய்ந்து, எந்த எழுத்துகள் எந்த அளவு இடம் பெறுகின்றன என்று கண்டறிந்தோம். அதாவது, 'அ' என்று எழுத்து ஒருமுறை வார்த்தைகளில் இடம்பெற்றால் பிற ஒவ்வோர் எழுத்தும் எவ்வளவு முறை இடம்பெறும் என்ற கணக்கு.

பிறகு, தமிழ் மொழியிலுள்ள இருநூற்று நாற்பத்தேழு எழுத்துகளை முப்பத்து மூன்றாகக் குறைத்தோம். இவற்றை 33 தனி வில்லைகளாகவும், 15 குறியெழுத்து வில்லைகளாகவும் உருவாக்கினோம். (குறியெழுத்து என்றால்? 'கீ','மீ', 'வீ' எழுத்துகளுக்கெல்லாம் வளைவு மேலே வருகிறதல்லவா? அந்த வளைவை மட்டுமே ஒரு வில்லையில் குறியிட்டால், அதை, க,ம,வ என்ற எழுத்து கொண்ட வில்லையின் மீது பொருத்தி விட்டால் கீ,மீ,வீ என்ற எழுத்துகளை அமைக்கலாம்)

# 'திருத்தமிழ்'



## தமிழுக்குப் புதுசு!

# விளையாட்டு!

இதற்கென திருத்தமிழ் அகராதி என்ற ஒன்றையும் உருவாக்கி இருக்கிறோம். நாங்களே நூற்று ஐம்பது ஆங்கில வார்த்தைகளுக்குப் புதிய தமிழ் வார்த்தைகளைக் கண்டுபிடித்திருக்கிறோம். உலகத் தமிழ் விளையாட்டுகள் என்ற நிகழ்ச்சியை www.thiruthamizh.com என்ற வலைத்தளம் மூலமாக நடத்தி, அதன் மூலம் தமிழ் ஸ்க்ராபிலையும் பிரபலப்படுத்த இருக்கிறோம்.

மருத்துவம், சட்டம், மகாபாரதம், ராமாயணம், பூகோளம், சினிமா என்று ஒவ்வொரு துறையில் மட்டுமே வார்த்தை அமைக்கும் அட்டைகளும் வில்லைகளும் தயாரித்து இருக்கிறோம். பொதுவான சொல் விளையாட்டு என்றால் ஸ, ஷ போன்ற எழுத்துகள் அதிகம் தேவையில்லை. ஆனால், இதிகாசங்களுக்கான சொல் விளையாட்டு என்றால் இந்த எழுத்துகள் அதிகமாகத் தேவைப்படும்.

இத்தகைய எங்கள் படைப்புக்குக் காப்புரிமை பெற்று, புதுப்பித்தலுக்காக விண்ணப்பித்து இருக்கிறோம்.

உலக அளவில் முதல் தமிழ் விளையாட்டுப் போட்டிகளை நடத்த உள்ளோம். விவரங்களை www.thiruthamizh.com என்ற வலைத்தளத்தில் பார்க்கலாம். அதில் 'திருத்தமிழ்' விளையாட்டையும் சேர்க்கவுள்ளோம். அரசின் ஆதரவு இருந்தால் இது பலரையும் அடைய பிரகாசமான வாய்ப்பு உண்டு'' என்கிறார் ராஜ்குமார். இது போன்ற அரிய முயற்சிகளைக் கவனத்தில் கொள்ளுமா தமிழக அரசு?

**- ஜி.எஸ்.எஸ்**

படங்கள்: **ஸ்ரீஹரி**






# துள்ளல்

இது இயக்குநர்கள் ஹீரோவாகும் சீஸன். லேட்டஸ்ட் புதுவரவு பிரவீண்காந்த், 'ரட்சகன்', 'ஜோடி', 'ஸ்டார்' ஆகிய படங்களின் இயக்குநர். ஏற்கெனவே ஸ்டார் படத்தில் வில்லங்க கேரக்டரில் நடித்தவர். துள்ளலில் ப்ளேபாயாக வலம்வந்து பல பெண்களின் சாபத்துக்கு ஆளாகிறார்.

அழகான பெண் என்றால் ஆலாகப் பறக்கும் பிரவீண்காந்த், அடிபட்டு, உதைபட்டு, கடைசியில் ஒரு பெண்ணின் பாசத்தால் நல்லவனாக மாறும் பழைய கதைதான். சொல்லப்பட்ட விதம்கூட புதுசு இல்லை. ஆனால், பிரவீண்காந்த் கையாளும் டெக்னிக்குகளுக்கு வலிமை அதிகம்.

ஹீரோயிசத்தைவிட வில்லத்தனம் நன்றாக வருகிறது பிரவீணுக்கு . நக்கல் நையாண்டி கலந்து பேசி, ரசிகர்களின் விசிலுக்கு உத்தரவாதம் பெறுகிறார். புதுமுக நாயகிகள் குர்லின் சோப்ரா, சோனிகா இருவர் நடிப்பிலும் துள்ளல் அதிகம். பரிதாபம், சோகம் என்று கலவையான உணர்ச்சிகளைக் கொட்டுகின்றனர். விவேக்கின் காமெடி அங்கங்கே கிச்சுகிச்சு மூட்டுகிறது. சீதா வரும் காட்சிகளில் சென்ட்டிமென்ட் வாசம்.

இசை, தினா. பின்னணியில் இன்னும் பிரமாதப்படுத்தியிருக்கலாம். கிடைத்திருக்கும் வாய்ப்பைப் பயன்படுத்தாமல் கோட்டை விட்டிருக்கிறார். பாடல்கள் பரவாயில்லை ரகம். 'சொல்லாதே' கும்மியடிக்க வைக்கிறது. சுரேஷ் தேவனின் ஒளிப்பதிவு கண்ணுக்கு மட்டுமல்ல இதயத்துக்கும் குளிர்ச்சி. பெண்களை ஏமாற்றும் கதையை எடுத்துக் கொண்டாலும், புதுமையைப் புகுத்தாமல் குண்டுச் சட்டிக்குள் ஆபாச குதிரை ஓட்டியிருக்கிறார் இயக்குநர். துள்ளல் – டைட்டிலில் மட்டும்தான்!

– வினோப்ரியா

உடைந்த கண்ணாடியின்
துணுக்குகளில் இருக்கிறது
இரத்த தாகமுள்ள எனக்கான பாதை

குத்திக் கிழிக்கப்பட்ட
பாதங்களின் தயக்கங்களில்
இருக்கிறது
நான் எட்ட வேண்டிய தொலைவு

நாட்களின் அந்தரங்க அறைகளில்
முகம் திருப்பி உட்கார்ந்திருக்கின்றன
என் கனவுகளும் நினைவுகளும்

இயங்க மறுக்கும் வாழ்க்கை
ஏதோ ஓர் இறுக்கத்தில்
முணுமுணுக்கிறது

அதனை வசந்தத்தின் கண்களால்
வர்ணிக்கும் என் கவிதையின்
பழுப்பேறிய சொற்கள் நிரம்புகின்றன
இலையுதிர் காலத்து வாய்க்குள்

பத்திரிகை ஒன்றில் வெளிவந்த
என்னுடைய 'இறுத்தல் எல்லைகள்'
கவிதையைப் படித்துவிட்டு
நண்பன் ஒருவன்
தொலைபேசியில் கேட்டான்

"நீ இறந்து எவ்வளவு
நாட்கள் ஆகின்றன?"



# இருத்தலின் எல்லையில்...

ஈரோடு தமிழன்பன்

# தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** தொழில் போட்டியில் வெற்றி கிட்டும் வாரம். உத்தியோ கத்தில் இடமாற்றம் ஏற்படும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். வராத நிலுவைகள் வசூலாகும். குரு/சனி/ராகு/கேது வழி பட்டு வந்தால் நலம் தரும்.

**ரிஷபம்:** உத்தி யோகத்தில் நற்பெயர் ஏற்படும். நீண்ட கால கடன் தொல்லைகள் தீரும். தாயின் உடல் நிலை சீராகும். வியா பாரத்தில் நல்ல அபி விருத்தி ஏற்படும். ராகு/ கேது வழிபட்டு வந்தால் நற்பலன் அளிக்கும்.

அதெல்லாம் சரி சார், எனக்கு எப்போ விடுதலை கிடைக்கும்?

**மிதுனம்:** தெய்வ பிரார்த் தனைகள் நிறைவேறும். உத்தியோகத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். கடன் சுமை குறையும். நண்பர் உறவினர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். புதிய தொழில் துவங்க லாம். குரு/சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**கடகம்:** நண்பர் / உறவினர்கள் மூலம் நல்ல தகவல் கிட்டும். வெளி நாடு சென்று படிக்கும் வாய்ப்பு வந்து சேரும். யாரி டமும் வாக்குவாதம் செய்யக்கூடாது. புதிய வேலை தேடுபவர்களுக்கு நல்ல தொரு வேலை வாய்ப்பு கிட்டும். ராகு/ கேது/ சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**சிம்மம்:** எந்தக் காரியமும் தாமதமாக நடந்தாலும், கடைசியில் வெற்றியை அளிக் கும். மன குழப்பம் தீரும். புதிய தொழில் முயற்சியை சற்றுத் தள்ளி போடவும். நண்பர் / உற வினர் மூலம் ஆதாயம் கிட் டும். பண கஷ்டம் விலகும். சனி/ராகு/ கேது / குரு வழி பாடு செய்துவர நற்பலன் உண்டா கும்.

**கன்னி:** சுபகாரிய செலவினங்கள் ஏற் படும். புதிய முதலீட்டில் செய்து நல்ல வருவாய் கிட்டும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். எதிர்ப்புகள் விலகும். உத்தியோ கத்தில் உயர்வு ஏற்படும். வீடு/மனை வாங்க உகந்த நேரம். குழந்தைகள் வழியில் மன சந்தோஷம் கிட்டும். குரு வழிபாடு செய்து வர நலம் தரும்.

**துலாம்:** பூர்வீகச் சொத்துகள் விற்று புது சொத்துகள் வாங்க நேரிடும். வாக்கு வன்மை மேலோங்கும். சிலருக்கு மகப்

## 15.7.2007 முதல் 21.7.2007 வரை...

# நடக்குமென்பார்; நடக்கும்!

பேறு பாக்கியம் உண்டாகும். வழக்கு வெற்றி பெறும். அந்நிய நாட்டு மனிதர்களால் அனுகூலம் ஏற்படும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வரவும்.

**விருச்சிகம்:** மன சந்தோஷம் கிட்டும். ஆடை ஆபரண அலங்கார பொருட்கள் வாங்குவீர்கள். வெளி நாட்டு மனிதர்களால் ஆதாயம் கிட்டும். மனக்குழப்பம் நீங்கும். தாயின் உடல் நிலை சீராகும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**தனுசு:** அஷ்டமத்து சனியின் பிடியில் இருந்து விடுதலை கிடைக்கும். உடல் நிலை சீராகும். வழக்கு முடிவுக்கு வரும். வேலைப் பளு குறையும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வெளியூர் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். குரு / சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**மகரம்:** எதிலும் கவனமுடன் செயல்படுவது நல்லது. கூட்டுத் தொழில்கள் செய்பவர்கள் உஷாராக இருக்க வேண்டும். பணக் கஷ்டம் இருக்காது. வேலைப்பளு அதிகரிக்கும். உணவுக் கட்டுப்பாடு அவசியம். வழக்குகள் வெற்றி அளிக்கும். திருமணக் காரியம் கைகூடும். யாருக்கும் முன் ஜாமீன் போடக் கூடாது. ராகு/கேது/ சனி வழிபட்டு வருதல் நற்பலனை அளிக்கும்.

**கும்பம்:** பதவி, புகழ் தேடி வரும். தடைகள் விலகி நல்லவை நடக்கும். குடும்ப வாழ்வில் விட்டுக்கொடுத்து நடந்து கொள்வது நல்லது. நீண்டகால கடன் தொல்லைகள் தீரும். உடல் ஆரோக்கியம் சீராகும். புதிய தொழில் முயற்சி கைகூடும். வேலை தேடுபவர்களுக்கு நல்ல வேலை கிடைக்கும். குழந்தைகளால் மனமகிழ்ச்சி ஏற்படும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**மீனம்:** வெளிநாட்டு மனிதர்களால் அனுகூலம் ஏற்படும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். கல்வியில் நல்ல மேன்மை கிட்டும். வீடு/ மனை வாங்க நல்ல தருணம். சத்ரு தொல்லை இருக்காது. உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். சனிக்கிழமைதோறும் சனி பகவானுக்கு தீபம் ஏற்றவும். நல்லது நடக்கும். ○

## பரத்வாஜ் பதில்கள்

**என்** மகளுக்கு நாங்கள் பார்க்கும் வரன் அமையுமா?

**- ஜி.ராஜாராம், பெங்களூர்**

*உங்கள் பெண்ணுக்கு குடும்பத்தார் விரும்பியபடியே வெளிநாட்டில் சம்பாதிக்கும் பையன், வாழ்க்கைத் துணையாக அமைவார். சொந்தம் கிடையாது. 2007ல் 26 வயதில் திருமணம் கைகூடும்.*

**என்** உறவினருக்கு வருங்கால வாழ்க்கை, வேலை அல்லது தொழில் எவ்வாறு இருக்கும்?

**- வி.கே.மூர்த்தி, சென்னை**

*30.5.2007 வரை குரு தசை நடைபெற்றது. இது ஜாதகருக்கு நற்பலனை எந்தவிதத்திலும் கொடுத்திருக்காது. 1.6.2007 முதல் சனித்தசை ஆரம்பமாகி உள்ளது. இது எதிர்காலத்தை வளம் கொழிக்கச் செய்யும்.*

# வாள் வீச்சும்...

"எனக்குத் தலை வலின்னா என் மனைவி மருந்து சாப்பிடுவா; அவளுக்கு வயிற்றுவலின்னா நான் பட்டினி கிடப்பேன்!"
"ஓ...! சாப்பிடறதுன்னா அவுங்க; பட்டினிக் கிடக்கிறதுன்னா நீங்களா...!"

– சீர்காழி வி.ரேவதி





"கால்வாய் வெட்டுவேன்... குளம் வெட்டுவேன்... கிணறு வெட்டுவேன்னு சொல்லி ஜெயிச்ச தலைவர் இப்ப என்ன பண்றாரு...?"
"எல்லாத்துலேயும் கமிஷன் வெட்டுறாரு...!"

– தஞ்சை தாமு

"நம் மன்னர் 'வாள் வீச்சில் சூரர்'ன்னு எல்லோரும் சொல்றாங்களே!"
"நீ வேற! 'வாய் வீச்சில்'னு சொல்லியிருப்பாங்க!"

– வெ.சீதாராமன்



# வாய் வீச்சும்!



"நான் செஞ்ச ரோஸ்ட்டோட டேஸ்ட் எப்படி இருந்ததுங்க?"

"வேஸ்ட் விமலா..."

- கே.ஆனந்தன்








"எனக்குத்தான் தேர்தல்ல ஸீட் கிடைக்கல்லே... நீ ஏண்டா அழறே?"

"எனக்கு எல்.கே.ஜி.ஸீட் கிடைக்கலேப்பா!"

- ஜீ.வி. சுபாஷ்

"எனக்கு நகைச்சுவை உணர்வு மட்டும் இல்லாவிட்டால் எப்போதோ தற்கொலை செய்துகொண்டு இறந்திருப்பேன்'' என்று ஒருமுறை காந்தியடிகள் கூறினார். தனி மனிதனுடைய வாழ்க்கையிலும் சரி, தேசிய வாழ்க்கையிலும் சரி, நகைச்சுவையானது முன்னேற்றத்துக்கு இன்றியமையாத அம்சங்களில் ஒன்றாகும். உலகில் முன்னணியில் நிற்கும் தேசத்தார் எல்லோரும், பெரிதும் நகைச்சுவை கொண்டவர்களாய் இருப்பதைக் காணலாம். இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய தேசங்களில் ஹாஸ்ய ரசத்திற்கு என்றே எத்தனையோ பத்திரிகைகளும் புத்தகங்களும் வெளியாகின்றன. பிரபல ஆசிரியர்கள் பலர் 'கழுதையின் குரல்' என்றும் 'நாயின் வால்' என்றும் ஹாஸ்யக் கட்டுரைகள் எழுதி வருகிறார்கள். லட்சக் கணக்கான ஜனங்கள் அவற்றைப் படித்துச் சிரித்து மகிழ்கிறார்கள். ''இந்தக் கட்டுரைகளினால் விளையும் பயன் என்ன? அவை போதிக்கும் நீதி என்ன?'' என்று யாரும் கேட்பதில்லை. ஒரு கணநேரம் புன்னகைக்காகவும், ஒரு நிமிஷ சிரிப்புக்காகவும் அவர்கள் 'ஷில்லிங்' கணக்கிலும், 'டாலர்' கணக்கிலும் பணம் கொடுத்துப் பத்திரிகைகளும் புத்தகங்களும் வாங்குகிறார்கள்.

பாரத நாடு சிறப்புடன் விளங்கிய காலத்தில் நமது முன்னோர் நகைச்சுவை உணர்வு அதிகமுள்ளவர்களாய் இருந்தனர் என்பதற்குப் போதிய சான்றுகள் இருக்கின்றன. இராஜ சபைகளில் நகையூட்டுவதற்கு என்றே விகடகவிகள், விதூஷகர்கள் முதலியோர் இருந்தார்கள். ஒவ்வொரு நாடகத்திலும் விதூஷகன் ஒரு முக்கிய பாத்திரமாக விளங்கினான். கம்பராமாயணம் முதலிய காவியங்களிலும் ஹாஸ்ய ரசம் பெரிதும் காணப்படுகிறது. ஆனால், பிற்காலத்தில் தேசம் பராதீனமடைந்து தாழ்வுற்றபோது மக்களின் நகைச்சுவையும் வீழ்த்தப்பட்டதாகத் தோன்றுகிறது. (ஒருகால் நகைச்சுவையை இழந்ததே தேசத்தின் வீழ்ச்சிக்கும் காரணமாயிருக்கலாமோ?)

தமிழ்நாட்டின் வாரப் பத்திரிகை ஒன்றில் உலக மகான்களைக் குறித்து நகைச்சுவையுள்ள குறிப்புகள் வாரந்தோறும் வெளியாகி வந்தன. அதன் பொருட்டு, மேற்கூறிய இனத்தைச் சேர்ந்த



# கண நேர புன்னகை!



ஒரு மகான் அந்தப் பத்திரிகையின் ஆசிரியரிடம் சென்று, ''ஐயா! இப்படி ஏன் பத்திரிகையின் இடத்தை எல்லாம் வீணாக்குகிறீர்கள்?'' என்று பரிதாபத்துடன் கூறியதாகக் கேள்விப்பட்டேன். பழைய தலைமுறையைச் சேர்ந்த இத்தகைய பத்தாம்பசலிகளை எவராலும் திருத்த முடியாது. இளைஞர்களும், இளம் பெண்மணிகளும்தான் நாட்டில் நகைச்சுவையை வளர்க்க வேண்டும்.

தமிழ்நாட்டில் நகைச்சுவை உணர்வு குன்றியிருக்கிறதாயினும் அதிர்ஷ்டவசமாக அது அடியோடு அழிந்து விடவில்லை. இந்தத் துர்ப்பாக்கிய நாட்டில் பிறந்த, தமிழ்ப் பிரமுகர்களிலும் சிலர் நகைச்சுவை உணர்வு பெற்றிருந்தனர்; பெற்றிருக்கின்றனர். தமிழுக்குப் புத்துயிர் தந்த காலஞ்சென்ற ஸ்ரீ சுப்ரமணிய பாரதி இத்தகையோரில் ஒருவராவார். பாரதியார் தமது வாழ்நாளில் பெரும்பகுதி துன்ப வாழ்க்கையே நடத்தினார். தமது சொந்த தொல்லைகளைவிடத் தாய்நாட்டின் துயரங்களை நினைந்து நினைந்து, அவர் உள்ளம் நைந்து உருகினார். எனினும், அவர் தம் நகைச்சுவையை மட்டும் இறுதி வரையில் இழக்கவில்லை. அவருடைய கவிதைகள் சிலவற்றிலும், வசன நூல்களிலும் நகைச்சுவை உணர்வு ஆங்காங்கு பீறிக் கொண்டு எழுவதைக் காணலாம்.

தேசம் சுதந்திரம் பெற்றுச் சுபிட்சமாயுள்ள காலத்தில் பாரதியார் பிறந்திருந்தால், இப்போது ஆங்காங்கே குமிழிவிட்டுக் கிளம்புவதுடன் நிற்கும் அவருடைய நகைச்சுவையானது பெரிய வெள்ளம் போல் பெருகி ஓடியிருக்கும் என்பதில் ஐயமில்லை.

'பாரதியாரின் நகைச்சுவையை உள்ளபடி அனுபவிப்பதற்கு, அவருடைய கவிதைகளையும், உரைநடை நூல்களையும் தொடர்ந்து படித்தல் அவசிய மாகும்.'

- கல்கி கட்டுரைகள்
3-லிருந்து,
மணிவாசகர் பதிப்பகம்

**அமரர் கல்கி**



## தமிழ்நாட்டில் நகைச்சுவை உணர்வு குன்றியிருந்தாலும் அதிர்ஷ்டவசமாக அது அடியோடு அழிந்துவிடவில்லை!




காதல் எல்லோருக்கும் பொது வான உணர்வுதான். ஆனால், சில பேர்கிட்டே மட்டும் அது புகுந்து விளையாடும். சில பேர்கிட்டே கவிதையா... சில பேர்கிட்டே ஓவியமா... சில பேர்கிட்டே கதையா... ஓவியர் ஜெயராஜ் படங்களைப் பார்க்கறப்பவும், சாண்டில்யனின் காதல் வர்ணனைகளைப் படிக்கறப்பவும் எந்தச் சூழ்நிலையில் இருந்தாலும், சட்டுன்னு காதல் மூட் வந்துடும். இந்த 'மூட்' மந்திரத்தை இவங்க பொட்டி, பொட்டியா வெச்சுட்டிருக்காங்க. இதோ சாண்டில்யனின் 'அவனி சுந்தரி' வரலாற்று நாவலிலிருந்து ஒரு வர்ணனையும் அதற்கு ஜெயராஜ் சாரோட ஓவியமும். இதைப் பார்த்ததும் உங்களை 'மூட்' மந்திரம் தாக்கிச்சா இல்லையான்னு சொல்லுங்க.

புலவர் மாளிகையில், தான் தமிழ் பயிலும் மாமணிக்கூடத்தின் பக்கத்துக் கதவை பாதித் திறந்துகொண்டு, அதில் திடீரென மயன் செதுக்கிவிட்ட சித்திரப்பாவையென, அழகெல்லாம் திரண்டுநின்ற பெண்தான் அவனி சுந்தரி என்பதைக் கேட்டதும், வாலிபனான நலங்கிள்ளி விவரிக்க வொண்ணா வியப்பில் ஆழ்ந்தான்.

♥ மதனராஜன்



பால்வடியும் குழந்தையின் முகம் போலக் கல்மிஷம் சிறிதும் தோன்றாத அந்த முகத்தின் அழகு, அவன் உள்ளத்தை அப்படியே கொள்ளை கொண்டதென்றால், லேசாக சலனமுற்ற கண்கள் மருண்ட மானின் விழிகளையே அவன் நினைவுக்குக் கொணர்ந்தன.

அவள் பிறை நுதலில் துளிர்த்திருந்த நாலைந்து வியர்வைத் துளிகள்கூட, முத்துக்களைப் போல அழகுக்கு அழகு செய்தனவேயொழிய எந்தவித விகாரத்தையும் அளிக்கவில்லை. காற்றில் அலைந்து அந்த முத்துக்களில் வளைந்து பதிந்து கிடந்த இரண்டு மூன்று மயிரிழைகள், இயற்கை ஏதோ அவள் நுதலுக்குச் சித்திரம் தீட்டிய பிரமையை உண்டாக்கின. நுதலுக்கு மேலேயிருந்த கரிய கூந்தல் நன்றாக எடுத்துப் பின்னப்பட்டு, வைரமாலையொன்றால் சுருட்டிக் கட்டப்பட்டிருந்தது. பிறைச் சந்திரனை மறைக்க முயலும் நீருண்ட மேகத்தை நினைவுபடுத்தினாலும், எல்லா மேகங்களும் மழைபெய்ய வேண்டிய அவசியமில்லையென்பதையும், சில கட்டுக்குள் அடங்கி நிற்க முடியுமென்பதையும் நிரூபிக்கவே செய்தது. அவள் நுதலுக்குக் கீழே கரேலென்று இயற்கை வரைந்திருந்த விற்புருவங்கள், தங்கள் அம்புகள் குறி தவறாதவை என்பதைக் காட்டுவதற்காக ஒரு முறை மேலே ஏறி இறங்கின. அவற்றை அடுத்து காதலம்புகளை வீசிய சலன விழிகளில், ஏதோ ஒரு சிரிப்பும் ஆழமும் இருந்தன.

நாசியிலிருந்து விரிந்த செழித்த மாம்பழக் கன்னங்களில் திட்டாகத் தெரிந்த குங்குமச் சிவப்பு, அவள் நாணத்தால் ஏற்பட்டதா அல்லது இயல்பே அப்படியா என்று நிர்ணயிக்க முடியாத நிலையை ஏற்படுத்தியிருந்தது. அந்த அழகிய கன்னங்களை இணைத்துக் கிடந்த பவள உதடுகளில் இருந்த ஈரமும், அவை சற்றே விலகியிருந்ததால் உள்ளே தெரிந்தும் தெரியாமலுமிருந்த இரு முத்துப் பற்களும், அவை உதடுகளா அல்லது அமுதம் சிந்தும் சுரபியா என்ற சந்தேகத்தை ஏற்படுத்தின.

அவள் நீண்ட மலர்க் கைகளில் ஒன்று கதவைப் பற்றியிருந்ததால் இருப்பது பொய்யோவென ஐயுறும்படியிருந்த சிற்றிடை.

அவள் ஏதோ நாட்டிய பாணியொன்றைக் கையாளுவதாகப் பிரமையை ஊட்டியது.



* ஜெயராஜ்



உலகம் இவ்வளவுதான்

# நாற்பத்தைந்து

எல்லா தேவதைகளுக்கும் இறக்கைகள் இருப்பதில்லை. 'ககாயா' (Kagaya) போனால் அதைக் கண் கூடாகப் பார்க்கலாம். ககாயா என்பது ஜப்பானில் உள்ள ஒரு ஹோட்டலின் பெயர். ககாயாவை ஹோட்டல் என்று அழைக்கலாம்; அல்லது சொர்க்கம் என்றும் வியக்கலாம்.

வரவேற்பறையில் காலடி பதிக்கும்போதே ஆச்சரியங்கள் தொடங்கிவிடுகின்றன. ஒன்றுமில்லை, இன்று பகல் பதினொரு மணிக்கு வருகிறேன் என்று, வரவேற்பாளினிக்கு ஃபோன் மூலம் தகவல் தெரிவித்துவிட்டால் போதும். குறைந்தது பத்து தேவதைகள் அழகிய நீல நிற கிமோனோ அணிந்து, வாசலில் உங்களுக்காகக் காத்திருப்பார்கள். காம்பவுண்டுக்குள் நீங்கள் நுழையும்போதே பத்துப் பேரும் நாற்பத்தைந்து டிகிரிக்கு முதுகை வளைத்து வணக்கம் சொல்வார்கள்.

கதவைத் திறந்து உள்ளே நுழைந்தால், வரவேற்பாளினி நாற்பத்தைந்து டிகிரிக்குக் குனிந்து புன்னகைத்து வணக்கம் என்பார். பிறகு அந்த ஹோட்டலின் உரிமையாளரின் நாற்பத்தைந்து டிகிரி வணக்கம்.



ஓர் உதவியாளர் உங்களை அழைத்துச் சென்று அறையைக் காண்பிப்பார். "இதோ, இதுதான் உங்கள் அறை." மீண்டும் ஒரு நாற்பத்தைந்து டிகிரி வணக்கம்.

இவர்களுக்கெல்லாம் முதுகுவலியே வராதா? என்று, நீங்கள் கண்களை விரித்து ஆச்சரியப்படுவதற்குள் ஓர் உதவியாளர் மீண்டும் உள்ளே நுழைவார். (Matcha) மச்சா எனப்படும் பச்சை நிற தேநீர், சிறிதளவு இனிப்பு இரண்டையும் கொடுத்துவிட்டு, மீண்டும் மறக்காமல் வணக்கம் சொல்வார்.

கதவைச் சாத்திவிட்டு படுக்கையில் உட்கார்ந்து தேநீர் சாப்பிட்டு முடித்திருப்பீர்கள். அரைமணி நேரம்கூட கழிந்திருக்காது. அழைப்புமணி ஒலிக்கும். எழுந்து சென்று கதவைத் திறந்தால், அதே உதவியாளர். ஒரு சிறிய பார்சலை உங்களிடம் கொடுப்பார். மீண்டும் வணக்கம்.

சாவகாசமாகக் கட்டிலில் அமர்ந்தபடி அந்தப் பார்சலைப் பிரிக்கலாம். உள்ளே யுகாடா (yukata) எனப்படும் கிமோனோ வகை ஆடை இருக்கும். அங்கே தங்கியிருக்கும் சமயங்களில் நீங்கள் இதை அணிந்து கொள்ளலாம். சுத்தமான மெத்து மெத்தென்ற ஆடை. அணிந்தபிறகுதான் ஒரு விஷயம் உங்களுக்கே தெரிய வரும். மிகமிகச் சரியாக உங்களுக்குப் பொருந்தக் கூடியதாக அந்த யுகாடா இருக்கும்.

ஒருவேளை நீங்கள் உங்களுடன் நான்கு பேரை அழைத்துச் செல்கிறீர்கள் என்றால், நான்கு பேருக்கும் அவரவர் அளவுகளில் ஆளுக்கொரு yukata செட் அளிக்கப்படும். நீங்கள் உள்ளே நுழையும்போதே பார்வையால் உங்களையும் உங்கள் நண்பர்களையும் உதவியாளர் அளவு எடுத்துவிடுவார்.

ஒருமுறை ஒரு தொழிலதிபர் இறந்து போன தம் மனைவியின் புகைப்படத்



மருதன்

தோடு ககாயாவுக்கு வந்திருந்தார். ககாயாவுக்கு வரவேண்டும் என்பது மனைவியின் விருப்பம். ஆனால், அது நிறைவேறவில்லை. அவருக்கு வாய்த்த உதவியாளருக்கு இந்த விஷயம் தெரிந்துவிட்டது. அன்று மதியம் வழக்கத்துக்கு மாறாக இரண்டு தட்டுகளில் தேநீர் கொண்டு சென்றார். ஒன்று போதும் என்று அவர் மறுத்தபோது அந்த உதவியாளர் சொல்லியிருக்கிறார்: ''இந்தக் கோப்பை உங்கள் மனைவியின் நினைவுக்காக.''

அறையிலிருந்து கீழே இறங்கி வந்து ரிசப்ஷனில் சிறிது நேரம் உட்கார்ந்து, பேப்பர் படிக்கவேண்டும் என்று நீங்கள் விரும்பினால், அந்த உதவியாளரிடம் அதைத் தெரியப்படுத்த வேண்டும். புன்னகைத்தபடி, உங்களை மாடிப்படி வழியாக அழைத்துச் செல்வார்.

உங்கள் அறையில் வைக்கப்பட்டிருக்கும் தீப்பெட்டியில், ஒரு தீக்குச்சி மட்டும் முந்திரிக்கொட்டை போல் துருத்திக் கொண்டிருக்கும். உங்களுக்காகக் காத்திருக்கிறேன் என்பது போல். பெட்டியைத் திறந்து குச்சியைத் துழாவ வேண்டிய அவசியம் இல்லை. உங்கள் அளவுக்கு ஏற்ப அறைக்கு உள்ளே அணிந்து கொள்ள பளீர் வெள்ளை நிற காலணிகள் அளிக்கப்படும். ஒரு நாளைக்குக் குறைந்தது நான்கு முறை அந்தக் காலணிகள் சுத்தம் செய்யப்படும்.

உங்கள் ஆடைகளை தினசரி துவைத்து, அயர்ன் செய்து, அழகாக மடித்து பூக்கள் எல்லாம் செருகி பணிவுடன் கொண்டு வந்து கொடுப்பார்கள். உங்கள் அறையில் உள்ள டெலிஃபோனுக்குக் கீழே கத்தையாக துணி மடித்து வைக்கப்பட்டிருக்கும்.

# டிகிரி வணக்கம்!

தூங்கிக் கொண்டிருப்பீர்கள், திடீரென்று ஃபோன் அதிர்ந்தால், பயம் வராமல் இருப்பதற்குத்தான். உங்களுக்கு நல்ல நினைவாற்றல் இருந்தால் ஒரு விஷயத்தை கவனிக்கலாம். உங்கள் உதவியாளர் அணிந்திருக்கும் கிமோனோவின் நிறமும் டெலிஃபோனுக்குக் கீழே உள்ள துணியின் நிறமும் ஒன்றாகவே இருக்கும். உண்மையில், அந்தக் கிமோனோவின் ஒரு பகுதிதான் அது. விதவிதமான நிறங்களை



காட்டி உங்களை இம்சிக்காமல் இருக்க இப்படி ஓர் ஏற்பாடு.

சாயந்திர சமயங்களில் ஒரு தேவதை koto எனப்படும் வாத்தியத்தை மென்மையாக வாசித்துக் காட்டுவார். உங்களுக்காக, உங்கள் ஒருவருக்காக மட்டுமே. அதற்கென தனி அறை உண்டு. அழைத்துச் சென்று உட்கார வைத்துவிடுவார்கள். தேநீர், இனிப்பு இரண்டும் நிச்சயம்.

சாப்பாட்டு மேஜைக்கு நீங்கள் தனியாகப் போக முடியாது. உதவியாளரும் கூடவருவார். வணக்கம் செலுத்திவிட்டு, உங்களை அழைத்துச் சென்று, நாற்காலியில் அமர வைப்பார். உங்களுக்கு என்னென்ன பிடிக்குமோ அத்தனையும் ஒன்றுவிடாமல் உங்கள் முன்னால் காட்சிப்படுத்தப்படும். உணவின் நிறத்துக்கு ஏற்றாற்போல் இடையிடையே கொத்துக் கொத்தாக மலர்கள் செருகப்பட்டிருக்கும். இரவு கொட்டாவி விட்டபடி படுக்கைக்குப் போகும்போது பிரமிப்பு நீங்காது. பஞ்சு மெத்தை. பஞ்சு தலையணை. பொருத்தமான இரவு நேர விளக்குகள். குண்டூசி விழும் சத்தம்கூட கேட்காது.

ஹோட்டலை காலி செய்து கிளம்பும்போது, உங்களை வழியனுப்ப அத்தனை பேரும் வாசலுக்கு வந்துவிடுவார்கள். உங்கள் தலை மறையும் வரை நீங்கா புன்னகையுடன், டாட்டா காட்டிக்கொண்டே இருப்பார்கள்.

ஜப்பான் ஒரு வரவேற்பு பூமி. ஹோட்டல்களில் மட்டுமல்ல இல்லங்களிலும்கூட இதே வரவேற்புமுறைதான். உதாரணத்துக்குத் தேநீர் விருந்து. ஜப்பானில் தேநீர் அருந்துவது ஒரு விரிவான சடங்கு. கடனே என்று நம் ஊர் மக்களைப் போல் கண்ணை மூடிக்கொண்டு விழுங்க மாட்டார்கள். 'அன்புடையீர் நிகழும் வைகாசி மாசம் இத்தனாம் தேதி, இத்தனை மணி நேரத்துக்கு, எங்கள் இல்லத்தில் தேநீர் விருந்து நடைபெற உள்ளது. தாங்களும், தங்கள் இஷ்டமித்திர பந்துக்களுடன் வந்திருந்து நிகழ்ச்சியைச் சிறப்பிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்- மெய்யாகவே இப்படி ஓர் அழைப்பிதழை, தெரிந்தவர்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

பிறகு அவர்களை வரவேற்று, தேநீர் அறைக்கு அழைத்துச் செல்வார்கள். இம்சிக்காத விளக்குகள். சுத்தமான அறை. ஒரு சிறிய மேஜைக்கு முன்னால் முட்டிக் கால் போட்டு அல்லது நம் ஊரில் பந்தியில் அமர்வார்களே அப்படி நீங்கள் அமரவேண்டும். அந்தக் குட்டி மேஜை மீது தேநீரைக் கொண்டு வந்து வைப்பார்கள். ரசித்து ரசித்து, ஊர் கதை உலகக் கதை பேசிக்கொண்டே இரண்டு, மூன்று மணி நேரங்கள் வரை அருந்திக் கொண்டே இருக்கலாம்.

அடுத்த முறை தேநீர் அருந்தும்போது, இத்தனை சமாசாரங்களையும் கண்களை மூடி அசை போடலாம். இப்போதைக்கு ஜப்பான் இருக்கும் திசை நோக்கி நாற்பத்தைந்து டிகிரி வளைந்து வணக்கம் சொல்லலாம். ●

# ஆசைப் பசி!



ஏதோ ஒன்றின் மேல் ஆசை உண்டானவுடன், அதை எப்படி அடைவது என்ற கவலையும் கூடவே பிறக்கிறது!

மனசு என்று ஒன்று வந்துவிட்டால், உடனே அதற்கு ஆசைகள் என்ற ஆயிரக்கணக்கான பசிகள் ஏற்பட்டு, அதைத் தீர்த்துக் கொள்வதில் கோபம், லோபம், பொய், பொறாமை, அழுகை, பயம் எல்லாமும் பட்டாளமாக வந்து விடுகின்றன. அப்படியாவது ஆசை தீர்ந்ததா என்றால் அதுதான் இல்லை. விடாமல் ஒன்று மாற்றி ஒன்று, ஆசைப் பூர்த்திக்கான கார்யங்கள் நம்மைப் பிடித்துக்கொண்டு பேய் மாதிரி ஆட்டி வைக்கின்றன. ஆனந்தம் வேண்டும் என்பதற்காகத்தான், நாம் செய்கிற இத்தனை கார்யங்களும் என்றாலும், இந்தக் கார்யங்களினால் அதிகபட்சமாக அடையக்கூடிய சந்தோஷங்களுங்கூடத் தாற்காலிகமாக இருந்து மறைந்துதான் போகின்றன. எதுவுமே கலப்படமில்லாத சந்தோஷமாக இல்லாமல் கையோடேயே ஒரு துக்கத்தையும் அழைத்துக்கொண்டு வருகிறது.

ஏதோ ஒன்றின் மேல் ஆசை உண்டானவுடன் அதை எப்படி அடைவது என்ற கவலை பிறக்கிறது. இன்னொருவன் அதை அடைய முயற்சி செய்கிறானென்றால், போட்டி போடுகிறானே என்று கோபம் வருகிறது. அதை அவன் அடைந்து விட்டால் பொறாமை; நாம் அடைந்து விட்டால் திமிர் - அவனை அவமானப்படுத்தத் தோன்றுவது - இப்படியாக ஆசையின் நிகர விளைவாக, ஏதோ ஒரு தோஷத்தை சம்பாதித்துக் கொள்கிறோம்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

## அருள்வாக்கு

"யாரு, யாரை என்ன பண்ணினா, இவருக்கு என்ன வந்தது? அதே பஸ்-ஸ்டாப்புல, எத்தனை பேரு நின்னு வேடிக்கைப் பார்த்திருப்பாங்க. இவரும், தன்னோட வேலையைப் பார்த்துக்கிட்டு வர வேண்டியதுதானே..." ஆத்திரத்தினாலும், படபடப்பினாலும் பேசும்போதே ராகவனின் உடல் நடுங்கியது.

அது நடந்து பதினைந்து நாட்களுக்கு மேல் இருக்கும்.

"ஈ.பி.பில் கட்டிட்டு, அப்படியே கொஞ்சம் காய்கறியும் வாங்கிட்டு வந்துடறேம்மா" என்று சொல்லிவிட்டு, வைத்தியநாதன் வீட்டை விட்டுக் கிளம்பும்போது, மருமகள் தீபிகா கொஞ்சம் கூட எதிர்பார்க்கவில்லை. மனுஷன் திரும்பி

# புண்ணியம்

வரும்போது அரிவாள் வெட்டுபட்டு வீடு வந்து சேருவார் என்று.

"நாலு தடி பசங்க, ஒரு சின்ன பையனைத் துரத்திக்கிட்டு வந்தானுங்க. அவன் தடுமாறி கீழே விழுந்ததும் அரிவாளால வெட்டப் போனானுங்க, நான் போய் தடுத்தேன்... அது தப்பா?" பரிதாபமாக மருமகள் தீபிகாவைப் பார்த்து கேட்ட வைத்தியநாதன், ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்லும் வழியில் உடனே மயக்கமும் ஆனார்.

"ஈ.பி. பில் கட்டிட்டு நேரா வீட்டுக்கு வர வேண்டியது தானே; இப்ப எவ்வளவு அவஸ்தை?" பதினைந்து நாள் ஆகிவிட்ட நிலையிலும், ராகவனின் ஆத்திரம் இன்னமும் அடங்கவில்லை.



அவன் இந்தப் பதினைந்து நாள் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமல்ல. அரிவாள் வெட்டு ஆழமாக இடது கையில் இறங்கிய தால், வைத்தியநாதன் உடலிலிருந்து ரத்தம் வழிந்து தெரு முழுதும் அபிஷேகம் நடந்தது. போலீஸ் கேஸ் என்று சொல்லி டாக்டர்கள் அடம்பிடிக்க, உள்ளூர் கட்சித் தலைவரை சிபாரிசுக்கு அழைக்க வேண்டியதாகிவிட்டது.

நல்லவேளை, அலுவலக கான்ட்ராக்ட் விஷயமாக, ராகவன் அவரை ஏற்கெனவே இரண்டு முறை சந்தித்திருந்ததாலும், அவர் கேட்ட மேற்படியை பேரம் பேசாமல் தந்திருந்ததாலும் வேலை இலகுவாய் முடிந்தது. (வாழ்க பாரதம்!)

தனது நண்பர்களை அழைத்து ரத்தம் தர ஏற்பாடு செய்து, இரவு பகல் கண் விழித்து தந்தையுடன் ஆஸ்பத்திரியில் தங்கி, அலுவலக வேலைகளை அங்கேயே உட்கார்ந்து செய்து, ஆஸ்பத்திரியின் டெட்டால் மற்றும் பினாயில் வாசனைக்குப் பழகி, தினமும் தீபிகா செய்யும் உணவை எடுத்துச் சென்று தந்தையை உண்ண

வைத்தான். ஒரு நாளைக்கு ஒரு முறையாவது மூன்று வயது பேரனை அழைத்து வந்து அப்பாவுக்குக் காண்பித்து, ''பிளாஸ்டிக் சர்ஜரின்னா கொஞ்சம் செலவாகுமே...'' என்ற டாக்டர்களின் இழுவைக்கு, ''என்ன ஆனாலும் பரவாயில்லை, அப்பாவுக்குப் பழையபடி கை வரணும்'' என்று சொல்லி சம்மதித்து, இப்படியாய் பம்பரமாய்ச் சுழன்றான் ராகவன்.

இப்பொழுது ஆபரேஷன் எல்லாம் முடிந்து, டிஸ்சார்ஜ் ஆகி வைத்தியநாதன் வீட்டுக்கு வந்துவிட்டாலும் குணமாவதற்கும்,



கை பழையபடி செயல்பாட்டைத் துவங்குவதற்கும் சிறிது காலம் பிடிக்கும் என்றார் டாக்டர். நினைக்கும்போது, ராகவனுக்குக் கொஞ்சம் ஆத்திரமாகத்தான் இருந்தது.

அன்னிக்கு மட்டும் அப்பா, எவன் எக்கேடு கெட்டா நமக்கு என்னன்னு வந்திருந்தா, இந்தப் பிரச்னையே இல்லையே என்றுதான் நினைத்தான்.

அதைத்தான் மனைவி தீபிகாவிடமும் வார்த்தையாகக் கொட்டினான். வைத்தியநாதன் காதுகளிலும் இவன் தேள் கொடுக்கு வார்த்தைகள் விழாமல் இல்லை. ஆனால், அவர் ஒருவித சோர்வு நிலையில் கட்டிலில் படுத்திருந்தார்.

''இப்ப இருக்கற உலகமே வேற; குதிரைக்குக் கண்ணுல பட்டையா

பிரமை

கட்டுன மாதிரிதான் மனுஷங்க வாழ்ந்தாகணும்; நாம உண்டு நம்ம வேலை உண்டு, வேற எவன் இருந்தா என்ன, இல்லாட்டா என்ன?'' என்று உறுமினான் ராகவன்.

வாசலில் யாரோ ''சார்! சார்!'' என்று கூவும் குரல் கேட்டது. எதிரே உள்ள மளிகைக் கடை குமரப்பாவின் குரல்.

''என்ன சார்! இவ்வளவு அஜாக்கிரதையா இருக்கீங்க; உங்க பையன் ரோட்டுக்கு வந்து தண்ணி லாரியில அடிபட பார்த்தான். நல்லவேளை நான் பார்த்தேன்... காப்பாத்திட்டேன். சின்ன புள்ளைங்க இருக்கற வீட்டுல எப்போதும் காம்ப்பவுண்ட் கதவைச் சாத்தி வையுங்க சார்.''

இதைக் கேட்ட தீபிகா ஓடிவந்து, குழந்தையை வாங்கி வாரி அணைத்துக் கொண்டாள்.

ராகவனுக்கு வந்த ஆத்திரத்துக்கு, குழந்தையை நோக்கி ''இனிமே போவியா?'' என்றபடி கை ஓங்கினான்.

அவனைத் தடுத்த தீபிகா, ''பையனை அடிக்காதீங்க, யார் செஞ்ச புண்ணியமோ, குழந்தை பொழச்சிட்டான்'' என்றாள்.

உள் அறையிலிருந்து இதைக் காதில் வாங்கிய வைத்தியநாதன் இலேசாகச் சிரித்தார். கண்களில் கண்ணீர் எட்டிப் பார்த்தது. ஆனால், அதில் சந்தோஷம் வழிந்தது. ●

## பரத்வாஜின் இசைப் பள்ளி

புதுமையான இசைக்குச் சொந்தக்காரரான பரத்வாஜ், இன்னொரு புதிய விஷயத்தையும் அண்மையில் அரங்கேற்றியுள்ளார். 'பரத்வாஜ் ஸ்கூல் ஆஃப் மியூசிக்' என்ற இசைப்பள்ளியை ஆரம்பித்து மெல்லிசையின் நுட்பங்களைத் தெரிந்துகொள்வதற்கு வழிவகுத்துள்ளார்.

''இந்தியாவின் கலை பொழுதுபோக்குத் துறையில் மெல்லிசைக்கு எப்போதுமே தனி இடம் உண்டு. தொலைக்காட்சிகளில் திரை இசை சார்ந்த நிகழ்ச்சிகள் பிரபலமாகி வரவேற்கப்படும் சூழலில், ஏராளமான இளம்பாடகர்கள் திரைப்படம், டி.வி., வானொலி, மேடை இசை நிகழ்ச்சி இவற்றால் ஈர்க்கப்படுகிறார்கள். நல்ல குரல்வளம் பெற்றிருந்தாலும் பாடகர்கள் அடிப்படை மெல்லிசை நுட்பங்களைத் தெரிந்துகொள்வதற்கு, சிறப்புத் தொழில்முறை பயிற்சி தேவை. மேலும் கர்நாடக இசை, ஹிந்துஸ்தானி இசை, மேற்கத்திய இசை போன்ற பாரம்பரிய இசை வடிவங்களைப் பல நிறுவனங்கள் கற்றுத் தந்தாலும், மெல்லிசை பயிற்சிக்கென எந்த அமைப்பும் இல்லை. இதையெல்லாம் உத்தேசித்துத்தான் பரத்வாஜ் இசைப்பள்ளியைத் துவக்கியிருக்கிறேன்'' என்கிறார் பரத்வாஜ்.



இந்தப் பள்ளி, தமிழ்நாடு திறந்தவெளிப் பல்கலைக் கழகத்தின் அங்கீகாரத்துடன் கூடிய, ஓராண்டு மெல்லிசை பட்டயப் படிப்பை இந்த ஆண்டு செப்டெம்பர் மாதத்திலிருந்து துவங்குகிறது. சென்னை, கோவை, ஈரோடு, சேலம், திருச்சி, தஞ்சாவூர், மதுரை, திருநெல்வேலி ஆகிய இடங்களில் வகுப்புகள் நடைபெற இருக்கின்றன.

— ரேவதி



# பொற்றாமரை

## கலை இலக்கிய ஆய்வரங்கம்

## இரண்டாம் ஆண்டு விழா

இமயம் முதல் குமரி வரை விரிந்துள்ள நமது பாரதத் திருநாட்டின் அடித்தளமாக அமைந்துள்ள நமது பாரம்பரியமான பண்பாட்டின் வெளிப்பாடுகளாக விளங்குபவை கலை மற்றும் இலக்கியங்கள். எனவே கலை, இலக்கியங்கள் மூலம் நமது பண்பாட்டினை காக்க முனைபவர்களை அடையாளம் கண்டு அரசியலுக்கு அப்பாற்பட்டு ஒருங்கிணைக்கவே பொற்றாமரை.




**நிகழ்ச்சி நிரல்**

நாட்டிய நாடகம் :
**திருநங்கை நர்த்தகி நடராசன்.**

நற்றமிழாசிரியர் விருது பெறுவோர் :
**திரு.தி.வெ. இராஜேந்திரன்**
**திரு.கோ.திருஞான சம்பந்தம்**
**திருமதி. அ.சுப்புலட்சுமி**

**சங்க இலக்கியத்தில் தேசியம் எனும் தலைப்பில் தொடர் சொற்பொழிவு**

புறநானூற்றில் தேசியம் :
**புலவர் திரு. வீர.அரங்கராசன்.**

சிறப்புரை :
**அருட்செல்வர் டாக்டர். நா.மகாலிங்கம்.**

தலைமையுரை :
**இல.கணேசன்.**

நாள் : 21.07.2007 (சனிக்கிழமை)
இடம் : தட்சிணாமூர்த்தி அரங்கம், பி.எஸ் மேல்நிலைப்பள்ளி, ஸ்ரீராமகிருஷ்ண மடம் சாலை, மைலாப்பூர், சென்னை - 04.

---

தமிழ் கூறும் நல்லுலகில் ஆத்திகப் பெருமக்களுக்கு முப்பெரும் ரத்தினங்களாக

ஸ்ரீ :

ஸ்ரீமந் நாராயணனின் ஆயிரம் திவ்ய நாமங்களையும் பாமரரும் புரிந்து கொள்ளும் வண்ணம் எளிய தமிழ் நடையில் விளக்கிக் கூறும் நூல்

## நாமம் ஆயிரம் ஏத்த நின்ற நாராயணன்

சுமார் 1600 பக்கங்கள் - 5 பாகங்கள் - விலை ரூ. 600/-

ஜகன்மாதா ஸ்ரீலக்ஷ்மியைப் பற்றி உலகில் வழங்கும் (பெரும்பாலும்) எல்லா ஸ்தோத்ர, மந்த்ர, ஸூக்தங்களுக்கும் மூலத்தோடு பாமரரும் புரிந்து கொள்ளும் வண்ணம் எளிய தமிழ் நடையில் விளக்கத்தையும் தரும் உரை நூல்

## அல்லி மாமலர் மங்கை - ஸ்ரீ லக்ஷ்மீ

சுமார் 1200 பக்கங்கள் - 3 பாகங்கள் - விலை ரூ. 500/-

சூடிக்கொடுத்த சுடர்க்கொடி - ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவை, நாச்சியார் திருமொழி ஆகிய இரு ப்ரபந்தங்களுக்கும், பண்டைய வ்யாக்யானங்களை அடியொற்றி, பாமரரும் புரிந்து கொள்ளும் வண்ணம் எளிய தமிழ் நடையில் எழுதப்பட்ட எளிய தமிழ் உரைநூல்

## பூமாலை சூடிக்கொடுத்தவள் பாமாலை

சுமார் 900 பக்கங்கள் - 3 பாகங்கள் - விலை ரூ. 400/-

- மேற்கொண்ட மூன்று நூல்களையும் எழுதியவர், " நிறுவனர் பழுவேரி நல்லான் சக்ரவர்த்தி ராகவஸிம்ஹாசார்யர்
- இந்த நூல்கள், நல்ல தாள்களில், சிறந்த அட்டைக்கட்டு (Perfect Bound) டன் யாரும் படிக்க ஏற்ற அளவிலான எழுத்துக்களில் அச்சிடப்பட்டுள்ளன.
- இந்த நூல்களைப் பெற விரும்புவோர் DD அல்லது M.O. மூலமாக, குறிப்பிட்டுள்ள சலுகை விலையோடு ரூ. 30/- (Per Book) தபால் செலவுடன் சேர்த்து கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பவும். DD / M.O. "ஸ்ரீ விஷ்ணு சித்தஸ்ரீ " (Sri Vishnu Chitha Sri) என்ற பெயரில் எடுக்க வேண்டும்.
- ஆர்டர் செய்த தேதியிலிருந்து புத்தகங்களை போஸ்டில் பெற இரு வாரங்கள் அவகாசம் தர வேண்டப்படுகிறது.
- நூல்களின் விற்பனை வருமானம், வைணவக் கோட்பாடுகளை உலகளாவிய அளவில் பரப்புவதை நோக்காகக் கொண்ட எமது ட்ரஸ்ட்டுக்கு மூலதனமாகச் சேரும் என்பதால் பகவத் கைங்கர்யத்துக்கே பயன்படும்.

### இந்நூல்கள் கிடைக்குமிடங்கள்

**"ஸ்ரீ விஷ்ணு சித்த ஸ்ரீ"**
புது எண். 18, வெங்கடேச அக்ரஹாரம்,
மயிலாப்பூர்,சென்னை- 4.
☎ : 044 - 32519772 / 42658989 / 9381030130

**கிரி டிரேடிங் ஏஜென்சி**
10, கபாலீஸ்வரர் கோயில் தெரு,
மயிலாப்பூர், சென்னை - 4.
☎ : 044 - 24640376, 24642350, 24953820

# என்ன பாட்டு இது?



ஆண்டாளின் நாச்சியார் திருமொழியில் இருக்கும் அந்தரங் கமும் பகவானுடன் சொந்தம் கொண்டாடுவதும் பிரபந்தத்தின் வேறு எந்தப் பகுதியிலும் கிடைக்காது.

குயில்கள் இனிமையாகத்தான் பாடுகின்றன. அதைக் கேட்டு ஆண்டாள் ரசிப்பதில்லை.. என்ன பாட்டு இது? எதற்காகப் பாட்டு? திருவேங்கடத்து இறைவன் எனக்கு ஒரு வாழ்வு தந்தால் பாடுங்கள். உங்கள் பாட்டை நான் கேட்பதற்கு அவர் வந்து என்னைச் சேரவேண்டும். அப்போது உங்கள் பாட்டுகளைக் கேட்கிறேன்.

***பாடும் குயில்காள்! ஈது என்ன பாடல்? நல்வேங்கட***
***நாடர் நமக்கு ஒரு வாழ்வு தந்தால் வந்து பாடுமின்;***
***ஆடும் கருளக் கொடி உடையார் வந்து அருள்செய்து***
***கூடுவராயிடில் கூவிநும் பாட்டுகள் கேட்டுமே.***

(கருளக்கொடி உடையார் - கருடனைக் கொடியாகக் கொண்ட திருமால்)

ஆண்டாளின் பக்தியின் தீவிரம் அப்படிப்பட்டது. திருமால் வந்து சேரவில்லை என்றால் இயற்கையின் இனிய சப்தங்கள் கூட ரசிப்பதில்லை. காதலர்களையும் புதுசாகக் கல்யாணம் செய்து கொண்டவர்களையும் கேட்டுப் பாருங்கள். காதலன் வரும் வரை எதுவுமே சிறக்காது, எதுவுமே இனிக்காது. வந்துவிட்டால் பஞ்சுமிட்டாய்க்காரன் மணி கூட இனிமையாக இருக்கும் என்கிறார்கள். ஆண்டாளின் காதல் அப்படி. பூக்கள், தோகை விரிக்கும் மயில்கள், மழை, கடல் அனைத்துமே கோவிந்தன் வந்தால்தான் இனிக்கின்றன.

(படிக்கலாம்)

• சுஜாதா

# உள்ளம் தொடும் உழைப்பு!

வேல் என்றும் வெல்லும்! - டாக்டர் விஜயலட்சுமி இராமசாமி, வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17, விலை 50/-

தமிழ்க் கடவுளான முருகப் பெருமானின் புகழ் பாடும் நூல். இந்து மதத்தின் தொன்மை, அது ஆழமாகப் பரப்பி விரித்து வைத்திருக்கும் பண்பாட்டுக் கூறுகள் போன்றவை சுவைபட விளக்கப்பட்டிருக்கின்றன. முருகப் பெருமானின் மீது பாடப்பட்ட பாடல்களையும் வள்ளித் திருமணம் போன்ற தெருக்கூத்து நாடகங்களையும் எளிமைப்படுத்தி தந்திருக்கிறார்கள். அந்த வகையில் இந்நூல் பக்தர்கள் மனத்தையும் வெல்லும்!




பெண் குழந்தை வளர்ப்பு: பெற்றோர்களுக்கான கையேடு, சி.எஸ். தேவ்நாத், நர்மதா பதிப்பகம், விலை ரூ 60/-

குழந்தை வளர்ப்பு என்பது ஒரு கலை. ஒரு தேர்ந்த சிற்பி, லாகவத்தோடும் கவனத்தோடும் ஒரு சிலையைச் செதுக்குவது போலதான். அல்லவற்றை விலக்கி நல்லவற்றை ஊட்டிக் குழந்தைகளை வளர்த்தல் வேண்டும். பெண் குழந்தை வைத்திருக்கும் அனைத்துப் பெற்றோரும் அவசியம் வாசிக்க வேண்டிய நூல்.

லக்ஷ்கர் - ஏ-தொய்பா ஓர் அறிமுகம், பா.ராகவன், கிழக்கு பதிப்பகம், 35/15, எல்டாம்ஸ் ரோடு, ஆழ்வார்பேட்டை, சென்னை -18, விலை ரூ.60/-

உலகத் தீவிரவாதத்தின் தலைமை மையம் லக்ஷ்கர் - ஏ-தொய்பா. இது நிகழ்த்தி முடித்த கோரங்களும் ரத்தச் சம்பவங்களும் நம்மால் என்றும் மறக்க முடியாதவை. அந்தத் தீவிரவாத இயக்கத்தின் தோற்றம், வளர்ச்சி, அதன் திட்டங்கள் என எக்ஸ்ரே கண் கொண்டு எழுத்தில் வடித்திருக்கிறார் பா.ராகவன்.

பிரபலங்கள் மனசுல... மணவை பொன்.மாணிக்கம், கற்பகம் புத்தகாலயம், 4/2, சுந்தரம் தெரு, தி.நகர், சென்னை-17, விலை ரூ.100/-

மீடியா சார்ந்த தமிழகப் பிரபலங்களின் முன்னேற்ற அனுபவங்கள். சுருக்கமாக, நறுக்குத் தெறித்தாற் போன்று சொல்லியிருப்பது சிறப்பு. இன்றைய சாதனையாளர்களின் பின்னணி எத்தகைய வலி நிறைந்தது என்பதைப் படிக்கும் போது உழைப்பின் அருமை உள்ளத்தைத் தொடுகிறது.

- கபிலன்

# தொழில் தொடங்கலாம், வாங்க!

சிறு தொழில் துவங்க விரும்புபவரா நீங்கள்? உங்கள் தொழில் நிறுவனத்தை குடியிருப்புப் பகுதியிலோ அல்லது வர்த்தகப் பகுதியிலோ அமைக்க முயலாதீர்கள். ஏனென்றால், மின் இணைப்பு, மாநகராட்சி உரிமம், குடிதண்ணீர் இணைப்பு போன்றவற்றைப் பெறுவதில் சிரமங்கள் உண்டாகலாம். எனவே, நீங்கள் தொழில் துவங்க விரும்பும் பகுதி எந்தவிதமாக வகைப்படுத்தப்பட்டிருக்கிறது (classification) என்பதை சி.எம்.டி.ஏ. அல்லது நகரமைப்பு நிர்வாகம் ஆகிய அமைப்புகளைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.

● தமிழக அரசின் சிறுதொழில் வளர்ச்சிக் கழகம், தமிழகம் முழுவதும் பெரிய சிறிய நகரங்களில் தொழிற்பேட்டைகளை அமைத்திருக்கின்றது. அங்கே தொழிற்சாலை நடத்திக் கொள்வதற்கான இடங்கள் விற்பனைக்குக் கிடைக்கின்றன.

● இது போன்ற தொழிற்பேட்டைகளில் தொழிற்சாலைகள் அமைக்கும் போது, தடையற்ற உயர் அழுத்த மின்சாரம், தண்ணீர் ஆகியவற்றைத் தட்டுப்பாடு இன்றிக் கொடுக்கும் பொறுப்பு சிறு தொழில் வளர்ச்சி நிறுவனத்தைச் சார்ந்தது.

● சிறுதொழில் வளர்ச்சி நிறுவனத்துக்கு மாவட்டத் தலைநகர்களில் அலுவலகம் உண்டு. அதை அணுகினால், நீங்கள் துவங்க இருக்கும் தொழிலுக்கான முழு விவரங்களையும், வழிகாட்டுதல்களையும் பெற முடியும்.

● கடன் வாங்காமல் தொழில் நடத்த முடியுமா? தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம், தொழில்மேம்பாட்டு வங்கி மற்றும் தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள், சிறு தொழிலுக்குக் கடன் கொடுக்கத் தயாராக இருக்கின்றன. சிறு தொழில் துவங்க, மூன்று கோடி வரை கடன் பெற முடியும்.

● தொழில் துவங்குவதற்கு முதலில் சிறுதொழில் வளர்ச்சி நிறுவனத்தின் உரிமம் பெற வேண்டும். பின்னர் நீங்கள் துவங்க இருக்கும் தொழில் நிறுவனம் குறித்த ப்ராஜக்ட் ரிப்போர்ட் தயாரிக்க வேண்டும். இதைத் தயாரித்தளிக்க ஆலோசகர்கள் நிறைய பேர் இருக்கின்றனர். ப்ராஜக்ட் ரிப்போர்ட் மற்றும் உரிமத்துடன் வங்கிகளை அணுகினால், நிச்சயம் மூலதனத்தில் 75 சதம் கடன் கொடுப்பார்கள் மீதியைப் புரட்டுவது உங்கள் பாடு. அடுத்த ஐந்து வருடங்களில், துவங்கப் போகும் தொழில் எந்த வகையில் லாபகரமாக இயங்க வாய்ப்புண்டு என்பது ப்ராஜக்ட் ரிப்போர்ட்டில் தெளிவாகக் குறிப்பிடப்பட வேண்டும்.

● பொதுவாக, தொழில் கடன் என்பது இயந்திரங்கள் வாங்க மட்டுமே



கொடுக்கப்படும். அந்தப் பணமும் நேரடியாக இயந்திரம் விற்கும் நிறுவனத்துக்கே சென்றுவிடும்; கைக்கு வராது.

- மூலதனத்துக்கு மட்டும் வங்கிகள் கடன் கொடுக்கும் செயல் மூலதனத்துக்கு (running capital) நிதி நிறுவனங்கள் உதவி செய்யும். இதற்கென சி.சி. (cash credit) மற்றும் ஓ.டி. (over draft) எனப்படும் வசதிகள் உண்டு. ஆனால், நீங்கள் வாங்க நினைக்கும் உயர்ந்தபட்ச சி.சி. அல்லது ஓ.டி. தொகைக்கு உங்கள் சொத்துகளை காரண்டியாகக் காட்ட வேண்டும்.

- தொழில் தொடங்குவதற்கு முன் தொழிற்சாலை ஆய்வாளரிடம் உரிமம் பெறுவது முக்கியம். இது தவிர, இ.எஸ்.ஐ., பிராவிடண்ட் ஃபண்ட் ஆகிய நிறுவனங்களோடும் தொடர்பு கொண்டு உரிய அனுமதி பெற வேண்டும். வாட் வரி அலுவலகத்தோடு தொடர்பு வைத்து, தகுந்த ஆலோசனைகளைப் பெற்று, முறைப்படி உரிமம் (நம்பர்) பெற்று, கணக்கீடுகளை நிர்வகிக்க வேண்டும்.



- இப்படி, பலவிதமான அனுமதிகளைப் பெற ஒற்றைச் சாளர முறை, சிறுதொழில் வளர்ச்சி அலுவலகத்தில் உண்டு.

- வாங்கிய கடனை உடனே திரும்பிச் செலுத்த முடியாது அல்லவா? எனவே, ஓராண்டு காலம் தொழில் ஸ்திரமாக வாய்ப்புக் கொடுக்கப்படும். அதன் பிறகு தவணைகளைச் செலுத்தத் துவங்கினால் போதும்.

- சிறுதொழில் வளர்ச்சி நிறுவனம் (Sidco) தவிர, சிறுதொழில் மேம்பாடு (Sipco) நிறுவனமும் தமிழகம் முழுவதும் தொழிற்பேட்டைகள் அமைத்திருக்கிறது.

**– கௌசி**

**பொதுவாக, தொழில் கடன் என்பது, இயந்திரங்கள் வாங்க மட்டுமே கொடுக்கப்படும்**

# ஊரறிந்த கள்ளர்!

சிவனை அபிஷேகப் ப்ரியர் என்றும் விஷ்ணுவை அலங்காரப் ப்ரியர் என்றும் அழைத்து உரிமை கொண்டாடு கிறது நம் மரபு. அலங்காரப் ப்ரியன் அழகனாகவும் இருப்பதில் அதிசய மொன்றுமில்லைதான். ஆனால், அழகர் கோயில் என்று அழைக்கப்படும் திருமாலிருஞ் சோலையில் காட்சிதரும் சுந்தரராஜ பெருமாள் 'அலயஸ்' அழகர் பிரான் இருக்கிறானே... அவன் எந்த அலங் காரமும் இல்லாத நிலையிலும் ஜகத்தை வெல்லும் அழகனாக இருக்கிறான்!

இத்தனைக்கும், பல நூற்றாண்டு கால ஆராதனையில் அவனது வார்ப்பு உரு வத்தின் தீர்க்கமான உறுப்புகளெல்லாம் மழமழப்பேறி உருண்டுவிட்டன. அந்தத் தேய்மானமேகூட அழகைத் தேக்கிக் கொண்டு ததும்பி நிற்கிறது - சுந்தரராஜ பெருமாளின் தோற்ற அழகை மட்டு மின்றி, காலங்காலமாக அவனை அண்டி வந்து கொண்டிருக்கும் கணக்கிலடங்கா பக்தர்களுடைய நம்பிக்கையின் அழகைத் தேக்கி நிற்கிறது; அத்தனை பக்தர்களுக்கும் அலுக்காமல் சலிக்காமல் அவன் வாரி வழங்கும் அருளின் அழகையும் அன்பின் அழகையும் தவழவிட்டு நிற்கிறது. ஸ்ரீதேவி - பூதேவி நாச்சியார்கள் அவன் அருகே நிற்கிறார்கள். அவர்கள் முகத்துச் சிரிப்போ, அவனுடைய அழகைக் கண்டு ஸ்தம்பித்து நிற்கும் நமது பிரமிப்பை ரசிக்கும் சிரிப்பாக இருக்கிறது.

சுந்தரராஜ பெருமாளுக்குப் பின்னால் மூலமூர்த்தி பஞ்சாயுதங்களுடன் நின்ற கோலத்தில் காட்சி தருகிறார். விசுவரூபம் போல் உயர்ந்து நிற்கும் தோற்றம். பாதாதி கேசம் தரிசிக்கும் நம் ஆவலுக்குத் திரை போட்டு தைலக்காப்பு சார்த்தியிருக் கிறார்கள் மூலவருக்கும் அவனது தேவியர் களுக்கும். பட்டர் பிரான் தீப ஒளியினால் நமக்கு அவன் திருமுகத்தைக் காட்டித் தருகிறார். கையில் அவன் ஏந்தியுள்ள திருச்சக்கரம் 'பிரயோக நிலையில்', பாய்ந்து சென்று தாக்கத் தயாராக இருப் பதை விளக்குகிறார். பக்தர்களின் இன்னல் களையும் இடர்களையும் களைய 'இதோ தயார்' என்கிறானாம் பெருமான்.

எந்நாளும் பக்தர்கூட்டம் மொய்த்துத் தள்ளுகிறது அழகர்கோயிலில். இன்று நேற்றல்ல - இந்தப் புகழும் ஜன ஆகர்ஷ ணமும். ராமாயண, மகாபாரத, பாகவத புராணங்களில்கூட இத் தலத்தின் மகிமை யும் பெருமையும் சொல்லப்பட்டிருக்கின் றன. அந்தக் காலத்தில் இதற்கு 'ரிஷபாத்ரி' என்று பெயர் விளங்கியிருக்கிறது.

புராணங்களில் மட்டுமின்றி வர லாற்றிலும் சிறப்பிடம் பெற்றுள்ளது ரிஷ பாத்ரி. மலையத்துவஜ பாண்டியன் காலந் தொட்டு மன்னர்களாலும் அரச வம்சத் தாராலும் வணங்கப் பெற்று கைங்கர்யங் கள் செய்யப்பெற்ற தலம். 108 வைண திவ்ய தேசங்களில் ஒன்று; பன்னிரண்டு ஆழ்வார்களுள் ஆறு பேர் இத் தலத்தைப் போற்றிப் பாடியிருக்கிறார்கள். பெரியாழ் வார் பாசுரத்தில் அழகர்கோயில் மதில்

சீதா ரவி

சுவரைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. நாம் அழகர்கோயில் செல்கிறபோது இன்றளவும் அந்த மதில் காட்சி தருவதைப் பார்க்கிறோம். தொன்மைக்கே உரிய ஒரு கம்பீரமும் அழகும் அந்த மலையடிவாரத்தைச் சூழ்ந்திருக்கின்றன.

'பச்சைமா மலை போல் மேனி, பவள வாய் கமலச் செங்கண்' என்று அரங்கமா நகர் உளானைப் பாடினார் பெரியாழ்வார்! சுந்தரராஜ பெருமாளோ பச்சைமா மலையின் அடிவாரத்தில் குடிகொண்ட பவள வாய் - கமலச் செங்கண்ணன்!

பெரியாழ்வாருக்கும் சோலைமலைக்கும் நெருங்கிய வரலாற்றுத் தொடர்பு இருக்கிறது. ஆண்டாளுடன் சேர்ந்து இங்கே அழகரைத் தரிசிக்க அவர் வந்திருக்கிறார். ஆண்டாள் வரித்த அரங்கநாதர், அழகர் வடிவத்தில் வந்தே அவளை ஆட்கொண்டதாகச் சொல்லப்படுவதுண்டு.



* ஆண்டாள்

**இந்தத் தலத்தில்தான் பெருமாள் தனது திருக்கல்யாண தினத்தில், ஸ்ரீதேவி-பூதேவி, கல்யாண சுந்தரவல்லி மட்டுமின்றி ஆண்டாளுடனும் சேர்ந்து எழுந்தருளி இருக்கிறார்!**

ஆண்டாள் நாச்சியார் கண்ணனுடன் ஐக்கியமான பிறகு, பெரியாழ்வார் திருமாலிருஞ்சோலையிலேயே தங்கிவிட்டார்; இங்கேயே பரமபதித்தார். 'யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்' என்று மாணிக்கவாசகர் சிவபெருமானைச் சொன்னதுபோல் பெரியாழ்வார் இந்தச் சோலைமலையானை விடாமல் பிடித்துக் கொண்டு பத்துப் பாடல்களைப் பாடியிருக்கிறார்!

*வளைத்து வைத்தேன், இனிப்*
*போகலொட்டேன்!*
*உன்தன் இந்திர ஜாலங்களால்*
*ஒளித்திடில் நின் திருவாணை கண்டாய்;*
*நீ*
*ஒருவர்க்கும் மெய்யன் அல்லை;*
*அளித்து எங்கும் நாடும் நகரமும்*
*தம்முடைத்*
*தீவினை தீர்க்கல் உற்றுத்*
*தெளித்து வலஞ்செய்யும் தீர்த்தம்*
*உடைத் திரு*
*மாலிருஞ் சோலை எந்தாய்*

'உன்னை வளைத்துப் பிடித் தாயிற்று. இனி போக விடமாட்டேன், தெரிந்து கொள். உன் 'திருமார்பில் உறையும் திருச்செல்வி மீது ஆணையாகச் சொல்

கிறேன்- என்னை மீறி நீ இந்திர ஜாலம் காட்டி மறைய முயன்றாயோ... தெரியும் சேதி!' என்று ஒரு மிரட்டு மிரட்டுகிறார்- ஒரு பாடலில்!

பெரியாழ்வார் குறிப்பிடும் அந்தத் திருச்செல்வியைப் பார்ப்போம்...

பிரதான கோபுர வாசலில் நுழைந்து, வெயில்காலமெனில், கட்டெரிக்கும் கல்தரையை நீண்ட தூரத்துக்குக் கடந்துதான் மூல மூர்த்தியின் பிராகாரத்தை அடைய முடியும். அங்கே தரிசனம் முடித்து, திருச்சுற்றில் தனிச் சன்னிதி கொண்டுள்ள தாயாரைப் போய்ப் பார்க்க வேண்டும். அழகிய மணாளனையுடைய இந்த அழகியின் பெயரும் கல்யாண சுந்தரவல்லி. பட்டும் புஷ்பங்களும் பளிச்சிடும் நெற்றித் திலகமுமாகக் காட்சி தருகிறாள். 'புவன சுந்தரனின் இதயநாயகி நான்... இதற்கு மேல் எனக்கென்ன வேண்டும்?' என்பது போன்றதொரு நிறைவு பொலியும் முகம். மஞ்சள் காப்பு பிரஸாதம் தரும் பட்டர்கள், கல்யாண சுந்தரவல்லியிடம் பிரார்த்தித்தால் திருமணத்தடை விலகி உடனே கல்யாணம் ஆகும் என்று 'விளம்பர இடைவேளைகளில்' அறிவித்த வண்ணம் இருக்கிறார்கள்!

ஆண்டாளுக்குத் தனிச் சன்னிதி இல்லாமலா...? அவளும் அபூர்வமான அமர்ந்த கோலத்தில் இருக்கிறாள். இந்த ஒரு தலத்தில் மட்டும்தான் பெருமாள் தனது திருக்கல்யாண தினத்தில் ஸ்ரீதேவி - பூதேவி, கல்யாண சுந்தரவல்லி மட்டுமின்றி ஆண்டாளுடனும் சேர்ந்து எழுந்தருள்கிறான். மூலஸ்தான பூஜையைப் போலவே ஆண்டாள் சன்னிதியிலும் ஆறுகாலம் பூஜை உண்டு.

மதுரையிலிருந்து சுமார் இருபது கி.மீ. தூரத்தில் வடதிசையில் உள்ள சோலை மலையில், கீழே மாமனும், மேலே - மலையுச்சியில் மருமகன் முருகனும் குடி



* ஆதிசேஷ வாகனத்தில் அழகர்

கொண்டிருக்கிறார்கள்! சுந்தரராஜர் கோயிலையொட்டியே பதினெட்டாம்படி கருப்பண்ணசாமிக்குக் கோயில் இருக்கிறது. இவரது வரலாறு மாய-மந்திரம்-தந்திரம் கலந்தது. 'அழகரின் சக்தியைக் கவர முயன்ற ஒரு கூட்டத்துக்கு உதவப் போய்ப் பாடம் கற்பிக்கப்பெற்று இங்கேயே தங்கிவிட்டார் கருப்பண்ணசாமி' என்று ஒரு கதை இருக்கிறது.

அது சரி, இந்தத் திருமாலிருஞ்சோலை அழகருக்கு கள்ளழகர் என்ற பெயர் எவ்வாறு வந்தது...? ஏன் வந்தது?

அப் பெயர் தோன்றி ஒட்டிக்கொள்ளக் காரணமாக இருந்தவர் பெரியாழ்வார்தான்! 'நெஞ்சைக் கவர்ந்த கள்வன்' என்று மகிழ்ந்து அவனைச் செல்லமாக அவர் அழைக்க, அதுவே இன்று சுந்தரராஜ பெருமாளின் ஊரறிந்த பெயராக ஒலித்துக் கொண்டிருக்கிறது.

# சிறு வெள்ளரி பெரு வணிகம்!

நடப்பு நிதியாண்டில் இந்தியாவிலிருந்து கெர்கின்ஸ் (Gherkins) ஏற்றுமதி, ரூபாய் ஆயிரம் கோடியைத் தாண்டும் என மதிப்பிடப்பட்டுள்ளது. சர்வதேச அளவில் ஆண்டொன்றுக்கு இதன் சந்தை மதிப்பு நாலாயிரத்து நூறு கோடி! சமீப ஆண்டுகளாக தமிழ்நாடு மற்றும் ஆந்திராவிலிருந்தும் வெளிநாடுகளுக்கு கெர்கின்ஸ் ஏற்றுமதி ஆகிறது. தமிழ்நாட்டில் கெர்கின்ஸ் உற்பத்தி மற்றும் ஏற்றுமதி வணிகத்தில் International Agricultural Processing Pvt.Ltd., என்ற நிறுவனம் முன்னிலை வகித்து வருகின்றது. இது திண்டுக்கல் மாவட்டம், நிலக்கோட்டை அருகே இயங்கி வருகிறது.

கெர்கின்ஸ் என்பது ஐரோப்பிய தேசத்துப் பயிர். நம்மூர் வெள்ளரி வடிவம் கொண்டது. சற்று குட்டையானது; கொஞ்சம் கெட்டியானது. மேலை நாடுகளில் இது ஒரு வகையான உணவுப் பொருள். வெளிநாட்டவரின் உள்ளங் கவர்ந்த 'கெர்கின்ஸ்'க்கு இந்தியாவில் சிறு வெள்ளரி என்று பெயர்.



**ஓர் ஏக்கரில் சுமார் ஐயாயிரம் கிலோ சிறுவெள்ளரி அறுவடை ஆகிறது.**

முப்பது சென்ட் முதல் ஓர் ஏக்கர் வரை வைத்திருக்கும் ஒரு விவசாயிக்கு, சிறு வெள்ளரி சாகுபடி பெரும் வரப்பிரசாதம் எனச் சொல்லப்படுகிறது. தொண்ணூறு நாள் பயிர். அடுத்து ஒரு மாற்றுப் பயிர் செய்து விட்டு, பின் மீண்டும் சிறு வெள்ளரி சாகுபடிக்குத் திரும்பலாம். சுழல் முறையில் வருடத்தில் மாறிமாறி இரண்டு முறை சிறு வெள்ளரி; இரண்டு முறை மாற்றுப் பயிர் என ஆண்டு முழுவதுமாக வருவாய் ஈட்டலாம். இந்த நிறுவனத்தின் களப்பணியாளரிடம் சிறு வெள்ளரி விவசாயத்தைப் பற்றிப் பேசியபோது,

"சிறு வெள்ளரிக்கான விதைகள் ஹாலந்து நாட்டிலிருந்து தருவிக்கப்படுகின்றன. ஓர் ஏக்கருக்குப் பத்தாயிரம்



விதைகள். இந்தச் சாகுபடிக்கு மணல் கலந்த செம்மண் தோட்டம்தான் மிகவும் உகந்தது. சிறு வெள்ளரி விதைகளை விதைப்பதற்கு முன் பிருந்து, அதன் அறுவடைக்காலம் முழுவது மாக, எப்படி இயங்க வேண்டுமென ஒவ் வொரு விவசாயிக்கும் செய்முறைப் பயிற்சி களை, அவர்களது தோட்டங்களுக்கே வந்து சொல்லித் தருகிறோம். விதை ஊன்றிய முப் பத்தைந்தாவது நாளிலிருந்து காய்க்கத் துவங்கி விடும். சிறு காய்களாக இருக்கும்போதே அவற் றைப் பறித்துவிட வேண்டும். சிறு வெள்ளரி சாகுபடிக்கான விதைகள், உரங்கள் போன்ற வற்றை எங்கள் நிறுவனமே தந்துவிடுகிறது'' என்கிறார்.

''ஓர் ஏக்கரில் குறைந்தது ஐயாயிரம் கிலோ, சிறுவெள்ளரி அறுவடையாகிறது. தொண்ணூறு நாள் சாகுபடியில் ஓர் ஏக்கரில் குறைந்த பட்சம் இருபதாயிரம் ரூபாய் லாபம் காணலாம். சாகு படியின்போது சந்தைக்குக் கொண்டு செல்லும் சிரமம் எங்களுக்கு இல்லை. எல்லாவற்றையும் ஐ.ஏ.பி. நிறுவனமே பார்த்துக் கொள்கிறது'' என்கிறார் சிறு வெள்ளரி விவசாயி ஒருவர்.

திண்டுக்கல், மதுரை, திருநெல்வேலி, திருச்சி, தஞ்சாவூர் ஆகிய மாவட்டங்களி லிருந்து நிலக்கோட்டை ஐ.ஏ.பி.க்கு சராசரியாக ஒரு நாளைக்குச் சுமார் முப்பது டன் சிறு வெள்ளரி வந்து சேர்கிறது. விவசாயிகளிட மிருந்து ஐந்து ரகங்களாகக் கொள்முதல் செய் யப்பட்டு ஐ.ஏ.பி.க்கு வந்த பின்னர், உணவுப் பொருளாகப் பதப்படுத்தும் முன், பத்து ரகங் களாகப் பிரித்தெடுக்கப்படுகிறது.

''விவசாயிகளிடமிருந்து பெறப்படும் சிறு வெள்ளரியிலிருந்து எட்டு சதம் கழிவு போய் விடும். அதனைத் துல்லியமாகப் பிரித்தெடுத்த பின்னரே, கடுகு, மிளகு, பூண்டு, மிளகாய், வெங்காயம், சதக்குப்பை, உப்பு, சர்க்கரை மற்றும் வினிகர் எனப்படும் பதப்படுத்தும் திரவம் போன்றவற்றை அதனதன் விகிதங் களுடன் கலந்து, சிறு வெள்ளரிகளை உணவுப் பொருளாகத் தயாரித்து, கண் ணாடிப் பாட்டில்களில் நிரப்பி வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறோம்'' என்கிறார் அதன் தயாரிப்பு நிர்வாகி.



நெதர்லாந்து நாட்டின் பீட்டர் உட்டேவால் என்பவரால், நிலக் கோட்டை அருகே 1999-ல் துவங்கப் பட்டது இந்த ஐ.ஏ.பி. அப்போது ஐம்பது பணியாளர்கள். தற்போது நேர் முகப் பணியாளர்கள் நானூறுபேர். மறைமுகப் பணியாளர்கள் ஐநூறுபேர். இரண்டாயிரம் ஏக்கரில் சிறு வெள்ளரி சாகுபடி. அதனால் இரண்டாயிரம் விவசாயக் குடும்பங்கள் பயனடைந்து வருகின்றன. வெளிநாடு ஏற்றுமதி வணிகத்துக்கு மட்டுமே உரிமம் பெற்ற இந்த நிறுவனம் ரஷ்யா, பிரான்ஸ், ஜெர்மனி, ஸ்பெயின், நெதர்லாந்து, அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறது.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

"அம்மா... இது நல்லாயிருக்கா பாரு.."
இடுப்பில் கைகளை ஊன்றியபடி ஸ்டைலாக நடனமாடிக் கொண்டு கேட்ட ராஜாத்தியை நிமிர்ந்து பார்த்த கமலாவுக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது.

ஐந்து வயது சிறுமியான ராஜாத்தி.

# நிறம் மாறும்

# பட்டாம்பூச்சி!

விஜயநிர்மலன்

ஒல்லிக்குச்சி உடம்புக்குக் கொஞ்சம் பொருத்தம் இல்லாமல், தொள தொள வென்று வண்ணக் கண்ணாடி சில்லுகள் பதித்த, நீல நிற கவுன் தரையில் புரள, மாலை வெயிலில் பளபளப்பாக இருந்தாள்.

காலையிலிருந்து ஆறாவது முறையாக வேறு உடைக்கு மாறியிருந்தாள் ராஜாத்தி.

ஒவ்வொரு முறையும் அவள் உடை மாற்றிக் கொண்டு, ஆசையோடு பெற்றவளின் முன் வந்து நிற்கும் போதெல்லாம், தான் பெற்ற குழந்தையை விதவிதமாய்ப் பாராட்டி உள்ளம் உவகைக் கொண்டாள் கமலா.

இந்த முறையும் அப்படித்தான்...

''அடி என் செல்லம்... இந்த டிரஸ்ல நீ பட்டாம்பூச்சி மாதிரி எவ்வளவு அழகா இருக்கே தெரியுமா...? அப்படியே சினிமாவுல வர்ற பணக்காரவீட்டுப் பொண்ணு மாதிரியே ஜொலிக்கிறடி. என் கண்ணே பட்டுடும் போல இருக்குடி.... என் தங்கம்...''

இந்த நேரத்தில் பஸ் வந்து கொண்டிருக்கிற சத்தம் கேட்க... கமலாவுக்குத் திக்கென்றது.

''ஏய்... ராஜாத்தி, அஞ்சுமணி பஸ் வந்துடிச்சுடி. வியாபாரம் சரியா இல்லேன்னா உங்கப்பா இந்தப் பஸ்லகூட வந்தாலும் வந்துடுவாரு. உன்னை இந்தக் கோலத்துலப் பார்த்தா அவ்வளவு தான்! அதுவும் ஊத்திக்கிட்டுப் போதையில வந்துச்சின்னு வைய்யி என்னவோ பார்க்கிற கலெக்டர் உத்தியோகமே கெட்டுப் போன மாதிரி என் பிழைப்பையே கெடுக்கறீங்களேன்னு தாம் தூம்னு குதிக்கும். அப்புறம் என்னையும், உன்னையும் அடிக்கும். போம்மா... போய் உன் உடுப்பை மாட்டிக்கோ...''

கமலா பதற்றத்தோடு படபடவென்று சொல்ல...

அதுவரையில் அவளுள் இருந்த சந்தோஷம் மறைந்தது, பயத்துடன் கவுனைத் தூக்கிப் பிடித்தபடி அவசர அவசரமாகக் குடிசைக்குள் ஓடினாள் ராஜாத்தி.

அடுத்த ஐந்தாவது நிமிடம்... அங்கங்கே கிழிந்து ஒட்டுப்போட்டு தைத்திருந்த பழையப் பாவாடையைக் கட்டிக் கொண்டு, வீட்டுத் திண்ணையில் அமைதியாக உட்கார்ந்துகொண்டு, அடுப்புக்கு சுள்ளித் தறித்துக்கொண்டிருந்த அம்மாவையே பார்த்தபடி இருந்தாள் ராஜாத்தி.

பாத்திரங்களுக்கும், பழைய துணி வாங்கும் வியாபாரியான புருஷனுக்கு வாழ்க்கைப் பட்டாலும் ஒட்டைப் பாத்திரங்களுடன் அல்லாடிக் கொண்டிருந்தாள் கமலா!

'அகில இந்திய அளவில் முஸ்லீம்களுக்குத் தனி இட ஒதுக்கீடு வழங்க வேண்டும்' என்று ராஜேந்திர சச்சார் கமிட்டி சிபாரிசு செய்துள்ளது. இந்த நிலையில் கடந்த ஏப்ரல் மாதம் ஐந்தாம் தேதி சட்டமன்றத்தில் பேசிய முதல்வர் கருணாநிதி, ''தமிழகத்தில் வாழும் முஸ்லீம் மற்றும் கிறிஸ்தவர்களுக்குக் கல்வி மற்றும் வேலை வாய்ப்பில் தனி இட ஒதுக்கீடு வழங்கப்படும்'' என்று சொல்லியிருப்பது மிகுந்த சர்ச்சையை உண்டாக்கி இருக்கிறது. இதுகுறித்து தமிழ் நாடு முஸ்லிம் முன்னேற்றக் கழக தலைவர் பேராசிரியர் எம்.எச். ஜவாஹிருல்லாவிடம் பேசிய போது...

''தமிழகத்துக்கு முன்பாகவே கேரளாவில் கல்வி மற்றும் வேலைவாய்ப்புகளில், பிற்படுத்தப்பட்டவர்களுக்கான நாற்பது சதவிகித இடஒதுக்கீட்டில், முஸ்லிம்களுக்குப் பன்னிரண்டு சதவிகிதமும், கர்நாடகத்தில் அதே பிரிவுக்கு நான்கு சதவிகிதமும் தனி இடஒதுக்கீடு அளிக்கப்பட்டுள்ளது.

'தமிழகத்தில் முஸ்லீம்கள் செல்வச் செழிப்புடன் வாழ்கிறார்கள். எனவே, அவர்களுக்கு இட ஒதுக்கீடு தேவையில்லை' என்று சிலர் கருத்துச் சொல்

# அக்கறையா அரசியலா ?



## சர்ச்சை

கிறார்கள். ஆனால், தமிழகத்தில் வாழும் மக்களில் 5.6 சதவிகிதத்தினர் முஸ்லீம்கள் என்று 2001-ம் ஆண்டு நடத்தப்பட்ட மக்கள் தொகை கணக்கெடுப்புக் கூறுகிறது. அதேநேரத்தில், தமிழகத்தில் வாழும் ஏழை மக்களில், 4.1 சதவிகிதத்தினர் முஸ்லிம்கள் என்று நீதியரசர் ராஜேந்தர் சச்சார் தலைமையில் அமைந்த குழு தனது அறிக்கையில் குறிப்பிடுகிறது.

அரபு நாடுகளுக்கு முஸ்லீம்கள் ஓரளவுக்குச் சென்றிருந்தாலும், அவர்களில் 95 சதவிகிதத்தினர் உயர் கல்வி படிக்காத காரணத்தினால், மிகவும் கீழ்மட்டப் பணிகளில், கடினமாக உழைத்து அற்பமான ஊதியம் பெறும் நிலையில் உள்ளார்கள். இதற்காக அவர்கள் தங்கள் இளமையையும், குடும்ப வாழ்வையும் தியாகம் செய்கிறார்கள்.

தமிழகத்தில் வாழும் முஸ்லீம்கள் வணிகம் சார்ந்த தொழிலில் ஈடுபடுகிறார்கள். எனவேதான், அவர்கள் அரசு வேலை வாய்ப்பில் குறைவாக இருக்கிறார்கள் என்று சொல்லி வருகிறார்கள். ஆனால், நிரந்தர இடவசதி இல்லாமல், நடைபாதை வியாபாரிகளாக இருப்பவர்களில், முஸ்லீம்கள்தான் அதிகமாக இருப்பதாகச் சச்சார் குழு குறிப்பிட்டுள்ளது.

2006-ல் தமிழக அரசு வெளியிட்டுள்ள விவரக் குறிப்பின்படி, பணியில் உள்ள 296 ஐ.ஏ.எஸ். அதிகாரிகளில் பத்துப் பேர் மட்டுமே முஸ்லீம்கள், 231 ஐ.பி.எஸ். அதிகாரிகளில் எட்டு பேர் மட்டுமே முஸ்லீம்கள். 2007-ல் தமிழக அரசு வெளியிட்டுள்ள குடிமைப் பணியாளர் பட்டியலில் இடம் பெற்றுள்ள 540 அலுவலர்களில் 17 பேர் மட்டுமே முஸ்லீம்கள் (இவர்களில் மூவர் ஓய்வு பெற்றுள்ளனர்).

இதுதவிர பட்டப்படிப்பு, மருத்துவம், பொறியியல் போன்ற படிப்புகளில் முஸ்லீம் மாணவர்களுக்குக் கிடைத்துள்ள பிரதிநிதித்துவம் மிகச் சொற்பமானது.

'தமிழகத்தில் முஸ்லீம்கள் ஏற்கெனவே பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் இடம் பெற்றிருக்கும்போது, அவர்களுக்கு ஏன் தனி இட ஒதுக்கீடு?' என்ற கேள்வியைப் பா.ஜ.க. எழுப்பியுள்ளது. தமிழகத்தில் பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு 30 சதவிகித இட ஒதுக்கீட்டில் 142 சமூகங்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றில் 5 சமூகங்கள் முஸ்லீம்களாகும். இதன் விளைவாக அரசு வேலை வாய்ப்பிலும், கல்வி வாய்ப்பிலும் முஸ்லீம்களுக்குரிய பிரதிநிதித்துவம் கிடைப்பதில்லை. எனவேதான், கேரளாவைப் போல் பிற்படுத்தப்பட்ட முஸ்லீம் சமூகங்களுக்கு, தனியாக உள் ஒதுக்கீடு அளிக்கப்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது.

அகில இந்திய அளவில், இந்து மதத்தைச் சேர்ந்த பட்டியல் இன மக்களுக்கு மட்டும் முதலில் இட ஒதுக்கீடு வழங்கப்பட்டது. பிறகு இந்த இட ஒதுக்கீடு 1956-ல் சீக்கிய மதத்தைச் சேர்ந்த பட்டியலின் மக்களுக்கும், பிறகு 1990-ல் புத்த மதத்தைச் சேர்ந்த பட்டியல் இன மக்களுக்கும் அளிக்கப்பட்டது.

## தமிழகத்தில் வாழும் ஏழை மக்களில் 4.1 சதவிகிதத்தினர் முஸ்லீம்கள்!



இந்த உண்மைகளின் அடிப்படையில் முஸ்லீம்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் தனி இடஒதுக்கீடு அளிக்கத் தமிழக அரசு முடிவுச் செய்துள்ளதாக முதல்வர் கருணாநிதி அறிவித்துள்ளார். வெறும் மேம்போக்காக அறிவிக்காமல், ஓய்வு பெற்ற முன்னாள் இந்திய அரசுப் பணி அலுவலர் அம்பாசங்கர் ஆணையத்தின் பரிந்துரையையும், நீதியரசர் ஜனார்த்தனம்

# மதரீதியான ஒதுக்கீட்டை அனுமதித்தால் நாடு காலப்போக்கில் பிளவுபடும்!



* வானதி சீனிவாசன்

அவர்களின் பரிந்துரையையும் ஏற்றுக் கொள்வதாக முதல்வர் அறிவித்துள்ளது மகிழ்ச்சியளிக்கிறது. என்றாலும், உச்சநீதி மன்றத்தில் 69 சதவிகித இட ஒதுக்கீடு தொடர்பான வழக்கில் தீர்ப்பு வந்த பிறகு தான், சட்டபூர்வமாக முஸ்லீம்கள் மற்றும் கிறிஸ்தவர்களுக்கான தனி இட ஒதுக்கீடு குறித்து நடவடிக்கை எடுக்கப்படும் என்று முதல்வர் தெரிவித்திருப்பது ஏமாற்றத்தை அளித்துள்ளது'' என்கிறார்.

ஆனால், இந்த தனி இட ஒதுக்கீடு குறித்து தமிழக பா.ஜ.க. மகளிர் அணி மாநில செயலாளர் வானதி சீனிவாசன் முற்றிலும் மாறுபடுகிறார். ''ஓட்டு வங்கியைப் பிரிக்கும் ஏமாற்று வேலைதான் இது'' என்கிறார். மேலும் அவர்,

''ஐம்பது சதவிகிதத்துக்கும் மேலே ஒதுக்கீடு செய்வது என்பது சட்டத்துக்குப் புறம்பானது என்ற நிலை இருக்க, 69 சதவிகிதத்துக்கும் மேலே இன்னமும் ஐந்து சதவிகிதத்துக்கு முஸ்லீம்களுக்குத் தனியாக எப்படிக் கொடுக்க முடியும்? 69 சதவிகித இட ஒதுக்கீடு உச்சநீதிமன்ற தீர்ப்புக்காகக் காத்து இருக்கிறதே?'' என்று கேட்கிறார்.

''ஆந்திர மாநில அரசு சிறுபான்மை மக்களுக்குக் கொண்டு வந்த இட ஒதுக்கீடு சட்டத்தை ஆந்திர உயர்நீதி மன்றம் ரத்து செய்தது. இப்போது ஆந்திர அரசு உச்சநீதி மன்றத்துக்குச் சென்றிருக்கிறது. கேரளா, கர்நாடகாவில் மொத்த ஒதுக்கீடு என்பது ஐம்பது சதவிகிதத்துக்குள் இருப்பதால், அங்கு பிரச்னை இல்லை.

''இப்போது சச்சார் கமிட்டி பற்றி நிறைய பேசுகிறார்கள். ஆனால், தமிழ் நாட்டில் வாழ்ந்து வரும் முஸ்லீம் மக்களில் 95 சதவிகிதத்தினர் (ராவுத்தர், லப்பை), ஏற்கெனவே பிற்படுத்தப்பட்ட மக்களாக அறிவிக்கப்பட்டு, இட ஒதுக்கீட்டை அனுபவித்து வருகிறார்கள். இந்த நிலையில் மேலும் சிறுபான்மையோருக்குத் தனி ஒதுக்கீடு என்று பேசுவது, ஓட்டு வங்கியை மனத்தில் வைத்துத்தான்'' என்கிறார்.

''சிறுபான்மை என்பது இடத்துக்கு இடம் மாறுபடும். இந்த நிலையில் இட ஒதுக்கீடு யாரைச் சென்று அடையும்?

நமது நாட்டில் கல்வி நிலையங்களை யார் வேண்டுமானாலும் நடத்தலாம் என்று சொல்லும்போது, சிறுபான்மையோர் நடத்தும் நிறுவனங்களுக்கு மட்டும் சிறப்புச் சலுகைகள் ஏன்? சிறுபான்மை நிறுவனங்கள் நடப்பில் இருக்கும் இட ஒதுக்கீட்டுக் கொள்கையை அமுல்படுத்துவதில்லை. இவற்றில் அரசு உதவி பெறும் நிறுவனங்கள் ஐம்பது சதவிகிதம் வரை மட்டுமே ஒதுக்கீட்டை அமுல்படுத்துகின்றன.

மதராஸாக்கள் என்று மதக் கல்வியைக் கற்பிக்கும் இடங்களில், சாதாரண கல்வி முறையையும் சேர்த்து கற்பிக்க வேண்டும். இதுபோன்ற முயற்சிகளின் மூலமாகத்தான் சமுதாயத்தில் வளர்ச்சியைக் காண முடியும். சச்சார் கமிட்டிகூட, மேற்கு வங்கத்தில் உள்ள முஸ்லீம்கள் நிலை மோசமாக இருக்கிறது என்று படம் பிடித்துக் காட்டியிருக்கிறதே தவிர, தமிழக முஸ்லீம் நிலை நன்றாக இருப்பதாகச் சொல்லி இருக்கிறது.

மதரீதியான ஒதுக்கீட்டை அனுமதித்தால் நாடு காலப்போக்கில் பிளவுபடும். சிறுபான்மையோர் பெரும்பான்மையாக வசிக்கும் இடங்களில் உள்ள 'பெரும்பான்மையோர்' அமைதியற்ற சூழலில் தான் வாழ்கிறார்கள். இந்த நிலையில் சட்டப்படி கொடுக்க முடியாத ஒன்றை, 'தருவோம்' என்று தமிழகத்தை ஆளும் அரசியல்வாதிகள் சொல்வது ஏமாற்று வேலையே!'' என்கிறார்.

- ஸ்ரீநி







# மு.க. அழகிரிக்கு முக்கிய பதவி வருமா?

● எஸ்.விஜயலட்சுமி, சென்னை - 4

*? அரசு சுகாதார மையங்களைத் தனியாருக்கு விடுவதாக மத்திய அரசு யோசிப்பது சரியா?*

! சுற்றுச்சூழல் சுகாதாரத்துக்கான பொறுப்பை மருந்து தயாரிப்பு கம்பெனிகளிடமே விடலாம். அவர்களுக்கு பப்ளிஸிடியும் ஆச்சு, சரியாகப் பராமரிக்காவிட்டால் அவப்பெயர் என்ற பயமும் இருக்கும். ஆனால் சிகிச்சையை அரசாங்கமே நல்ல சம்பளம் கொடுத்து, சிறந்த டாக்டர்களை நியமித்து, மக்களுக்கு மலிவாகக் கிடைக்கச் செய்ய வேண்டும்.

● மதுரை முருகானந்தம், திருச்சி - 18

*? 2015-ல் இந்தியா வல்லரசு நாடாகும் என்கிற 'சிவாஜி'யின் கனவு மெய்ப்படுமா?*

! லாஜிக்கோடு கனவு காணும் கலாமின் 2020 கனவே கடினம்தான். வெறும் கற்பனையில் கோட்டை எழுப்பியுள்ள 'சிவாஜி'யின் கனவு, படம் தியேட்டரைவிட்டுப் போனதும் மறந்து விடும்.

● டி.ஆர்.சந்திரசேகரன், திருவள்ளூர்

*? மு.க.அழகிரிக்கு அக்கட்சியில் ஏதேனும் முக்கிய பதவி வழங்கப்படுமா?*

! ஏன், இப்போதிருக்கும் மதுரை சி.எம். பதவிக்கு என்ன குறைச்சலாம்?

● வீ.முத்தையா, திருநெல்வேலி

*? எந்தப் புது தமிழ்ப்படமும் போட்டிக்கு இல்லாதபோது, மக்கள் 'சிவாஜி'யை மட்டும்தானே பார்க்க முடியும்?*

! போட்டிக்குப் படங்கள் எப்படி வரும்? எல்லாம் 'சிவாஜி'யைப் பார்த்து பயந்து, ரிலீஸையே தள்ளி வைத்துவிட்டனவே... துணிந்து களமிறங்கியிருப்பவர்கள் மன்சூரலிகானும் பிரவீண் காந்தும்தான். ஆனால் துள்ளியும் யோகம் வரவில்லை என்பதுதான் உண்மை.

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்

*? இன்னும் இரண்டு மாதங்களில் புதிய கட்சி தொடங்கப்படும் என்றும் தேர்தலில் நூறு சதவிகித வாக்குப் பதிவுக்குப் பாடுபடுவதே புதிய கட்சியின் நோக்கம் என்றும் நடிகர் சரத்குமார் தெரிவித்துள்ளாரே?*

நீங்கள் கேட்டவை

**கல்கி 1.7.07 இதழில் இடம் பெற்ற வாசக தராசு போட்டியில் பரிசு பெறும் வாசகர் : என்.சண்முகம், சேலம்-1. அதிக வாக்குகள் பெற்ற கேள்வி எண்:12**

! நூறு சதம் வாக்குப்பதிவு என்பது நல்ல நோக்கமாயினும் வோட்டுக்களைப் பிரிப்பது என்பது சிறந்த நோக்கமில்லையே! ஒரு வேளை, தே.மு.தி.க. வோட்டுக்களைப் பிரிக்க திட்டம் அமல் படுத்தப்படுகிறதோ என்னவோ!

● ராமலட்சுமணன், கோவை-18

*? சிவாஜி கட் அவுட்டுக்குப் பால் அபிஷேகம் பற்றிய கேள்விக்கு, 'பாலுக்கு ஏங்கும் குழந்தைகள் கொண்டது நம் நாடு' என்று கூறியிருக்கிறீர்கள். கடவுளர் சிலைகளுக்கு நித்தம் நித்தம் லிட்டர் லிட்டராகப் பால் அபிஷேகம் நடக்கிறதே - இதற்கென்ன பதில்...? ஆசாமியோ - சாமியோ, பால் பால்தானே?*

! பால் பால்தான்;
சாமி சாமிதான்;
ஆசாமி ஆசாமிதான்.

சாமி நிலைக்கு ஆசாமி உயர முடியாது; உயர்த்தப்படக் கூடாது.

● எச்.ஆன்டனி தமிழரசன், மும்பை-17 ★

*? போலி முத்திரைத்தாள் வழக்கில் அப்துல் கரீம் தெல்கிக்கு நூறு கோடி அபராதமும் 13 ஆண்டுகள் சிறைத்தண்டனையும் வழங்கப்பட்டுள்ளதைப் பற்றி...?*

! நூறு கோடிக்கு அர்த்தமே இல்லை. அவரால் செலுத்த முடியுமா என்பது சந்தேகமே. இதைவிடவும் பரோலில் வெளியே வர முடியாதபடி கடுமையான ஆயுள் தண்டனை விதித்தால் மற்றவர்களுக்குப் பாடமாக இருக்கும்.

● என்.சுப்ரமணியன், ரவணசமுத்திரம் ❐

★ பகிரும்...

★ ... உணர்வு

*? தினமும் ரேஷன் அரிசி கடத்தலைப் பற்றி பத்திரிகைகளில் செய்தி வருகிறதே - இதைப் பற்றி தமிழக முதல்வர் எந்த comment-உம் தெரிவிப்பதில்லையே...?*

! கண்டித்தால், கள்ளக்கடத்தலையும் கறுப்புச் சந்தையையும் ஒப்புக் கொண்டதாகிவிடும். ஒப்புக்கொண்டால் அரசின் செயல்திறன் இன்மைக்குச் சான்றாகிவிடும்; தேர்தல் வாக்குறுதியே தப்பாகிவிடும். என்ன செய்வார், பாவம்!

● இரா.கல்யாணசுந்தரம், மதுரை

*? மாயாவதி வைத்திருக்கும் பல கோடி சொத்துக்களும் தொண்டர்கள் தந்ததாமே?*

! அதுவும் ஐந்தும் பத்துமாகக் கொடுக்கப்பட்டவையாம்! காதுல லேட்டஸ்ட் பூ!

● எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி

*? "யோகா காட்டுத் தீயைப் போல பரவி வருகிறது. இந்தியாவைப் போன்ற ஏழை நாட்டுக்கு அது மிகவும் ஏற்றது" என்கிறாரே லல்லுபிரசாத் யாதவ்?*

! யோகா நல்லதுதான்; அது காட்டுத் தீயைப் போல பரவுவதும் சிறப்புதான். ஆனால் யோகா ஏழைக்குச் சோறு போடாது. சத்துணவு குறைவின்றி உண்பவருக்கு, ஆரோக்கியமாக வாழ வழி வகுக்கும், அவ்வளவுதான். எனவே லாலுவின் கருத்து சரிபாதி சரி; சரிபாதி தப்பு.

● பி. சிவா, பாளையங்கோட்டை

*? சிமெண்ட் விலை உயர்ந்து கொண்டே போகிறதே...?*

! உற்பத்தியாளர்கள் நிர்ணயிக்கக் கூடிய விலையை நிர்ணயிக்க அரசுக்கு அதிகாரம் இருக்கிறது என்பதால் இது இரு தரப்பினரின் கூட்டுச் சதியாகவே தோன்றுகிறது.

● ராசாத்தி, ஸ்ரீவில்லிப்புத்தூர்

*? நிமிட்ஸ் கப்பலில் வந்த அமெரிக்கர்களால் கலாசார சீரழிவு ஏற்படும் என்று சிலர் பயமுறுத்துகிறார்களே?*

! நிமிட்ஸில் வந்த சிலர் குடித்துவிட்டு சென்னை தெருக்களில் வாந்தி எடுத்தார்கள். சிலர் விபசாரிகளைத் தேடி

அலைந்தார்கள். இந்தக் கலாசாரச் சீரழிவுகள் இங்கே ஏற்கெனவே இருப்பவைதாம். புதிய அபாயம், நிமிட்ஸ் கப்பல் அணு சக்தியால் இயங்குவது என்பதால், அணு உலையிலிருந்து ஏற்படக்கூடிய கசிவு, இவற்றையெல்லாம் மறைக்கத்தான் நிமிட்ஸ் ஊழியர்கள் சிலரின் ஒருநாள் சமுதாயத் தொண்டு.

- சுதா நாராயணன், ஸ்ரீரங்கம்

*? தமிழ்நாடு மின்வாரிய பொன் விழாவையொட்டி அதன் ஊழியர்களுக்குப் பல சலுகைகளை முதல்வர் அறிவித்துள்ளாரே - இனி மின்தடைக் காலங்களில் அவ்வூழியர்கள் உடனடியாக மின்சாரம் கிடைக்க நடவடிக்கைகள் எடுப்பார்கள் என்று எதிர்பார்க்கலாமா?*

! மின்வெட்டு - மின்தடைக்கும் இந்த ஊழியர்களுக்கும் சம்பந்தம் சிறிதளவே. மின் உற்பத்தி அதிகரிப்பதும் அதன் விநியோகம் சீர்படுவதும்தான் தீர்வு. இதற்கு ஏராளமான முதலீடும் நவீனமயமாக்கலும் தேவை. யோசிக்கவேண்டியது ரொம்ப இருக்கு.

- ஆர்.எஸ்.லக்ஷ்மி, கோவை

*? கல்கி 8.7.07 தலையங்கம் நடுநிலையிலிருந்து பிறழ்கிறதோ? ஹிந்து தலையங்கமே தலைமை தேர்தல் ஆணையர் சற்று யதேச்சாதிகாரத்துடன் நடந்துகொண்டதாகக் கண்டித்திருக்கிறதே?*

! தேர்தல் கமிஷன் சற்று அசந்திருக்க, வன்முறை தலைதூக்கி அதிகரித்திருந்தால் ஹிந்து தலையங்கம் வேறு விதமாக இருந்திருக்கும். மதுரை, இன்று அரசியல் கொதிகலன் என்பதை மறக்க முடியாது.

- ரொஸாரியோ ரவிச்சந்திரன், சென்னை - 59

*? சச்சின் டெண்டுல்கருக்குத் தரப்பட்ட 'மேன் அஃப் தி ஸிரீஸ்' பட்டத்தை அவர் யுவராஜ் சிங்குடன் பகிர்ந்துகொள்வதாக அறிவித்ததைப் பற்றி...?*

! அனைத்து ஆட்டக்காரர்களும் பின்பற்றவேண்டிய நல்ல உணர்வின் வெளிப்பாடு.

- எஸ்.கே.மூர்த்தி, கும்பகோணம்

*? பிரதிபா பாட்டீல் குடியரசுத் தலைவராக்கப்பட்டால் தலையாட்டிப் பொம்மையாகச் செயல்பட மாட்டாராமே?*

! ரப்பர் ஸ்டாம்ப் பிரெஸிடன்ட் தலையை எதுக்கு ஆட்டணும்? கையெழுத்துப் போட்டால் போதாதா?

- லலிதா செல்லப்பா, பம்மல்

*? இன்றைய நிலையில், புழக்கத்தில் உள்ள உயிர் காக்கும் மருந்துகளில் எழுபது சதவிகிதம் போலியானவை என்ற செய்தி அதிர்ச்சியாக இல்லை?*

! அதைவிடவும், அவற்றை நோயாளிகளுக்கு எழுதித்தரும் போலி அல்லது 'டாப் காலி' டாக்டர்கள்தான் அதிர்ச்சி தருகிறார்கள்.

- என்.மாணிக்கம், மின்னல்

*? எந்த அரசு வந்தாலும் பல சலுகைகளைத் தருகிறதேயொழிய விலைவாசியைக் கட்டுப்படுத்த நடவடிக்கை எடுப்பதில்லையே?*

! விலைவாசி கட்டுப்பட்டுவிட்டால் அப்புறம் சலுகைக்கு மதிப்பிருக்காது. சலுகைக்கு மதிப்பில்லாது போனால் வோட்டு வங்கி இவர்கள் பக்கம் சரியாது... அதனால்தான்! ●



✱ லேட்டஸ்ட் பூ!



✱ புதிய இலக்கு!

❐ ரூ.100/- பரிசு பெறுபவர்:

**என்.சுப்ரமணியன்,
ரவண சமுத்திரம்**

★ ரூ.50/- பரிசு பெறுபவர்:

**எச்.ஆன்டனி தமிழரசன்,
மும்பை**

# ஹலோ வாசகர்களே...
# இதோ இந்த வார உங்களின் தித்திக்கும் கருத்துகள்; தொலைபேசி வழியே அலைகளாக வந்த உங்கள் உள்ளத்து உணர்வுகள்!

**திவ்யா (கல்லூரி மாணவி), சென்னை:**

'என்ன படிக்கலாம்?' போன்ற பகுதிகள் என்னைப் போன்ற மாணவ - மாணவிகளுக்குப் பயனுள்ளதாக அமைந்துள்ளன. கல்கியில் வெளியான 'ம்', 'கொக' போன்ற தொடர்கதைகளை மிகவும் விரும்பிப் படித்தேன். சிறிதும் ஆபாசம் இல்லாமல், சினிமா பகுதியை அளிப்பது கல்கிதான். இது அப்படியே தொடர வேண்டும் என்பதுதான் எல்லோரின் ஆசை. தயவுசெய்து எந்த நிலையிலும் மாறிடாதீங்க ப்ளீஸ்!



**எஸ்.எஸ்.வாசன் (வங்கி ஊழியர்), கோவை**

கல்கியில் வருகிற தலையங்கம் மற்றும் அரசியல் சம்பந்தப்பட்ட கட்டுரைகளைப் படிக்கும்போது, மக்களாகிய எங்களின் உணர்வுகளை அப்படியே பிரதிபலிப்பது போலிருக்கிறது. எப்படி சினிமாவில் ஹீரோ செய்யும் சாகஸத்தைப் பார்த்து, சாதாரண ரசிகன் தன்னை அந்த ஹீரோவாக நினைப்பானோ, அப்படி எங்களின் ஹீரோவாகக் கல்கியை நினைக்கிறோம். ஆட்சி அதிகாரத்தில் உள்ளவர்களைப் பார்த்து நாங்கள் மனத்துக்குள் கேட்கும் கேள்வியை நீங்கள் எழுத்தால் விளாசுகிறீர்கள். தராசு பகுதியில் இடம் பெற்ற ஜனாதிபதி வேட்பாளர் குறித்த கேள்விக்கு அளிக்கப்பட்டிருக்கும் பதில் அதற்கு உதாரணம்.

**சாயிசுதா (முன்னாள் ஆசிரியை), ஈரோடு**

'ஊமை' கதை மிகவும் நன்றாக இருந்தது. இரண்டே பக்கம்தான் என்றாலும் எத்தனையோ சிந்தனைகளைத் தூண்டியது. ஒவ்வொரு வாரமும் வருகிற அருள்வாக்கு பகுதியை தனியே எடுத்துத் தொகுத்துட்டு இருக்கேன். மனதுக்குச் சக்தியைக் கொடுப்பது மகிழ்ச்சியும், நிம்மதியும்தான். அதைக் கல்கியில் வரும் ஆன்மிகப் பகுதிகள் சிறப்பாகச் செய்கின்றன.





பா.து.பிரகாஷ் - அமுதா (தம்பதி), தஞ்சாவூர்

**நா**ங்கள் இருவருமே கல்கியின் தீவிர வாசகர்கள். ஜோக்குகள் எல்லாம் நன்றாக இருக்கின்றன. ஜோக்குக்கு இரண்டு பக்கங்கள் ஒதுக்குவதைப் போல் 'ஹைகூ' பகுதியை ஆரம்பித்து ஒரு பக்கம் தரலாம். 'கிரேஸியைக் கேளுங்கள்' சிறந்த ரசனையுடன் இருக்கிறது. அமரர் கல்கியின் கட்டுரை 'நானுமல்ல... நரியுமல்ல...' படித்துக் களித்தோம். ராசிபலன் பகுதி ஒரே மாதிரி இருக்கிறது. அதில் மாற்றம் செய்தால் நல்லது.

## தித்திக்கும் திங்கள்!

# எங்கள் வீடு!





சுப்பராமன் (எல்.ஐ.சி.ஏஜண்ட்), உறையூர்

'**பா**ர்த்திபன் கனவு' மீண்டும் வருவதைப் பார்த்ததும் மனம் துள்ளியது. எங்கள் தந்தை காலத்திலிருந்தே கல்கி அவர்களின் கதைகளைத் தொகுத்து வைத்துப் படிப்போம். விளையாட்டு பகுதிக்கு இன்னும் முக்கியத்துவம் கொடுங்கள். திறமைகள் இருந்தும் வெளிச்சத்துக்கு வர முடியாமல் தவிக்கும் வீரர்களை, அடையாளம் காட்டினால் அவர்களும் வளர்வார்கள். விளையாட்டும் வளரும்.

**'சௌ**மியா' இந்தப் பெயருக்குரியவரை தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் என எல்லா மொழி சினிமா ரசிகர்களுக்கும் தெரியும். ஆனால், அவர்கள் ரசித்த ஒரு நடிகையின் நிஜப்பெயர் இதுதான் என அநேகமாக யாருக்கும் தெரியாது.

'இவன்' படத்தில் அவருடன் நடித்த பிறகு அவர் ஓர் அழகிய மனுஷி அல்ல... நம் கற்பனையையே கபளீகரம் செய்யும். ஒரு 'ரசனை ராக்ஷசி' என உணர்ந்தேன்.

# சூறுசூறுப்புடுவின்..



அவரை நான் படச்சுருளில் பதிவு செய்ததைத் திரையில் பார்க்கலாம். ஆனால், என் மனச் சுருளில் பதிவு செய்ததை, நான் மட்டுமே இப்போதும் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

என் அலுவலகத்தில் ஒரே ஒரு திரைப்பட நடிகையின் புகைப்படத்தை மட்டுமே பூக்களுக்குள் புதைத்து வைத்திருக்கிறேன். அது 'சௌந்தர்யா' எனும் சௌமியா! நடிகையை மீறி, நல்ல படங்களை ரசிப்பதும், தயாரிப்பதும் இயக்குவதுமாகக் கனவுகள் கோடி, தன் கண்களுக்குள் அவர் புதைத்து வைத்திருந்தார். அபரிமிதமான ஆற்றல் மிகுந்த அவருடனான என் நட்பு, காலம் கடந்தாலும், மிச்சமாய் இருக்கும் என நம்பினேன். ஆனால், அவரே இன்று கடந்த காலமாகி விட்டார். அவரைப் பற்றி எழுதினாலும் தீராது... தீராததை ஏன் எழுத வேண்டும்!

எனவே.........................................

.........................................!

ஒரு பொருள் தூரம் செல்லச் செல்ல சுருங்கி மறையும். மறைந்த சௌமியாவுக்கு... அந்தப் புள்ளிகள், அவரது குடும்பம் + என் கண்ணீர்த் துளிகள் எனத் தெரியும்.

எனது 'இவன்' படத்தின் நாயகி தீட்சண்யா (சௌந்தர்யா) ஒரு கர்நாடக சங்கீதப் பாடகி. இசையைத் தன் திருமண மாக ஏற்றுக் கொண்டவள். அதைத் தவிர வேறொரு சிந்தனை இல்லாதவளின் உள்ளே 'இவன்' புகுந்து, கச்சேரியில்

# ..சௌந்தர்ய லஹரி!

## ஜிகினா - 15

## ரா. பார்த்திபன்

தாளம் தப்பி விடுகிறது. ஓர் இசை விமர் சகரின் விமர்சனத்தில் தப்பிக்க முடியா மல் மாட்டிக் கொள்கிறாள். ஆக, கதை யில் அப்படி ஒரு இ.வி. வேண்டும்.

'சுப்புடு சாரே நடித்தால் எப்படி இருக்கும்?'

'நல்லா இருக்கும்! நடிப்பாரா?'

'என்னை யாரென்று தெரியுமா?'

'தெரிந்தாலும், ஒத்துக் கொள்வாரா?'

- இப்படி அடுக்குத் தொடராகக் கேள்விகள். இருந்தாலும், டில்லிக்குப் பேசி, வரச் சம்மதித்து, வந்தே விட்டார்!

Jan.8, 2002- New Woodlandsல் அறை எண் 1414ல் நேரில் சந்தித்தேன்.

''நல்லா இருக்கீங்களா?'' என்று, மிகப் பவ்யமாக ஆரம் பித்தேன்;

''சின்ன வயசுதான். என்ன... கொஞ்சம் முடி நரைச்சுப் போச்சு; இளநரை. மத்தபடி ரொம்ப நல்லா இருக்கேன்!'' என்கிற ரீதியில் படாரென்று பதில். திணறிவிட்டேன்.

அவர் கையை அல்ல... காலையே காலாய் நினைத்து விழுந்துவிட் டேன். அவ்வளவு 'spark' அவரிடம்!

என்னை மரியாதையே கொடுக்க விடாமல் நடந்து கொண்டார். என் வயதுக்கும் குறைவாக இறங்கிவிட்டார். அதனால், மீண்டும் மரியாதையே பிறந்தது.

கையைத் தொட்டார். தோளைத் தொட்டார். காஃபி உபசரித்தார். உடனி ருந்த என் உதவியாளரை, ''இவர், என் Assistant குமார்'' என்றேன்.

''ஐயோ பாவம்!'' என்றார் குறும் போடு!

பேசிய அரைமணி நேரத்தில், மூன்று

நொடிக்கு ஒரு நொடி மூக்குப் பொடி போட்டதைப் போல நகைச்சுவை நெடி! அன்று நான்தான் வடிவேலு!

''எந்தப் பாட்டை நான் கேட்கணும்? எதை விமர்சிக்கற மாதிரி நடிக்கணும்?'' என்றார்.

''அது வேற பாட்டு சார்! முதல்ல... இந்தப் பாட்டைக் கேளுங்க! இதுதான் அந்தப் பாடகியோட இசைக் காதலைச் சொல்ற பாட்டு!'' என்று.

'எனையென்ன செய்தாய் வேய்ங் குழலே?'' பாடலை ஓடவிட்டேன். துளி கணம்தான். கண்களை இறுக்கமூடிக் விரல்களால் நெற்றியில் தாளமிட்டுக் கொண்டே உள்ளே விழுந்துவிட்டார். பாடல் முடியும்போது இமை திறந்து வெளியேறினார்!

''அவன் இருக்கான் பாரு...! கிராதகன்! என்னமா பண்ணியிருக்கான்! இது அவ னால மட்டுமே முடியும்!'' என்று என் இசையராஜாவைச் சிலாகித்தார்.

''சரி நடிக்கிறேன்! மேக்கப்பெல்லாம் போடணுமா?'' என்றார்.

''வேண்டாம் சார் நீங்கதான் பழம் மாதிரி இருக்கீங்களே'' - அதோடு நிறுத்தியிருக்கலாம் நான். நிறுத்தா மல்...

''நானே மேக்கப் போடுறதில்லை சார்!'' என்றேன். அவ்வளவுதான், ஒரு முறை என் கார்மேக நீல வண்ணக் கண்ண முகத்தை ஒரு மாதிரியாய்ப் பார்த்துவிட்டு, ''அது சரி. கட்டுப்படி யாகணுமில்லே'' விடாமல் ''எவ்வள வுன்னுதான்'' என்றார். அல்சர் வரச் சிரித் தேன். மேக் - அப்புறது?''

படப்பிடிப்புக் காட்சிகளில் சூர்ய உதயம் போல் வெளிச்சமாக வந்து நிற் பார். எல்லோருக்கும் உற்சாகம் தொற்றிக் கொள்ளும்.

''என் பொண்டாட்டில்லாம் spot-க்கு வேண்டாமே! எதுக்கு அநாவசியமா!'' என்றார்.

காரணம் புரியாமல், ''பரவாயில்ல சார்... அதனாலென்ன... இருக்கட்டுமே!'' என்றேன்.

''இல்ல... எனக்குக் கல்யாணம் ஆன விஷயம் சௌந்தர்யாவுக்குத் தெரிஞ்சிடப் போகுது... அதான்!'' என்று பொக்கை வாயுடன் சிரித்தார்.

உண்மையில், படப்பிடிப்பின்போது சௌந்தர்யா என்னைவிட சுப்புடுவிடம் தான் பாந்தமாய், பக்கத்தில் அமர்ந்து கொண்டு நிறைய பேசினார். இதில் அவருக்குத் தனி கர்வம் வேறு! ஆனால், எனக்கு... எதுக்கு அந்த அல்சர் வேறு!

அவரைப் போல 'spark' ஒன்றிரண்டு என்னிடமும் இருக்கும். ஆனால், என்னைவிட அவர் shaaaarp! ஒருமுறைக் கும் குறைவாகச் சொல்லும்போதே,

> “பார்த்திபா... நான் நிறைய பேரைப் பத்தி எழுதிட்டேன். என்னைப் பத்தி நீ ஏதாவது எழுதித் தருவியா?”

அதைக் கிரகித்துக்கொண்டு நிறைவாக நடித்தார். முதல்முறை கேமரா அவரைப் பார்க்கிறது. மதிக்கவேயில்லை அதை அவர். சரளமாக, சகஜமாகப் பேசி நடித்து ஜமாய்த்துவிட்டார்!

அவரிடம் இருந்த சிறப்பான குணங் களில் அதிச் சிறப்பான குணம் சங்கீத மல்ல... இங்கிதம்! யாரைப் பற்றியும் 'புறம்பேசாமை'! தயவு தாட்சண்ய மில்லாமல் அப்படிப்பட்டவர்களையும், அந்த விஷயத்தையும் துரத்திவிடுவார்.

அவர் விடைபெறும்போது, என் னென்ன செய்தால் எனக்குத் திருப்தியோ, அதையெல்லாம் செய்து - கொடுத்து

காலில் விழுந்து வணங்கி வழியனுப்பினேன். குதூகலமாய் ஒரு குழந்தையைப் போல் மனைவியிடம் அதையெல்லாம் காட்டிக் காட்டி, பெருமைப்பட்டார்.

''எனக்கு உன்னை ரொம்பப் பிடிக்கும் பார்த்திபா!'' என்று ஒரே ஒரு முறை கன்னத்தைத் தட்டினார். கிளம்புகையில் ஆசீர்வாதமாய் இருந்தது அது!



* சுப்புடு

டில்லிக்குச் சென்ற பிறகும், என்னைச் சுற்றி நடப்பதையெல்லாம் அறிந்து, கடிதங்கள் எழுதுவார். திடீரென்று தொலைபேசியில் அழைத்து அன்பு பாராட்டுவார்.

ஒருமுறை மந்திரா பேடி (ஆடாமல் பேசியே 'கிரிக்கெட் புகழ்') என் படத்தில் நடிப்பதற்காக, என்னைப் பார்க்க வந்த செய்தியைப் படித்துவிட்டு அவர் எழுதிய ஒரு கடிதம்...

**அ**ன்புள்ள பார்த்திபா,

*ஆட்டைக் கடித்து மாட்டைக் கடித்து நீ மந்த்ராஸ்தாயிக்குப் போய்விட்டாய், பிடித்தாலும் பிடித்தாய் நல்ல புளியங் கொம்பாய்ப் பிடித்திருக்கிறாய். உனக்கு உடம்பில் எங்கேயோ ஒரு பெரிய மச்சம் இருக்கிறது. கிருஷ்ண பரமாத்மாவைப் போல், நீலமேக ஷ்யாமள வர்ணனாய் இருப்பதால் அந்த மச்சம் உன் கண்ணுக்குத் தென்படவில்லை. ஆகவே ஓ போடு!*

**நா**ன் ஒரு விளம்பர நிறுவனம் துவங்கியிருப்பதைக் குறித்தும் ஒரு கடிதம் எழுதியிருந்தார். அது...

*அன்புள்ள காண்டீபா!*

*உன் மடல் வந்தது. எனக்குக் கண் சிகிச்சை நடந்து கொண்டிருந்ததால் உடனே பதில் எழுத இயலவில்லை. உறையிலேயே உன் பேனா சிலம்பம் ஆடியிருக்கிறது. அதைத் திறக்காமலே நானும் என் மனைவியும் அதன் தாத்பரியத்தை ஆய்வு செய்து கொண்டிருந்தோம். நீ எழுதியது உனக்கு மறந்து போயிருக்கலாம். அதாவது 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவானேன்? உறையைத் திறந்து பின்தான் அதன் தாத்பர்யம் எங்கள் மரமண்டையில் உறைத்தது.*

*உன்னைச் சொல்லாடி என்று சொல்வதா அல்லது கில்லாடி என்று சொல்வதா என்று தெரியவில்லை.*

*நீ விளம்பர நிறுவனம் ஆரம்பிப்பதில் ஆட்சேபணையில்லை. ஆனால் உன்னுடைய subtle humour தமிழ்நாட்டு முட்டாள்களுக்குப் புரியுமா என்று புரியவில்லை.*

*இருந்தாலும், அதிக முதலீடு செய்யாமல் ஒன்று தொடங்குவதில் ஆட்சேபணை இல்லை.*

**அ**வரை 'சுறுசுறுப்புடு' அவர்களுக்கு... என்றுதான் கடிதத்தில் விளிப்பேன். காரணம், தாமதமில்லாத பதில் வந்து கதவைத் தட்டும் அவரிடமிருந்து.

...ஒருமுறை பேசும்போது,

''பார்த்திபா...! நான் நிறைய பேரைப் பத்தி எழுதிட்டேன். என்னைப் பத்தி நீ ஏதாவது 'article' எழுதித் தருவியா? வாசிக்கணும்!'' என்றார், வாஞ்சையாக.

அந்தச் சந்தர்ப்பம்,

அவர் வாசிக்க முடியாத தருணத்தில் இப்படி வருமென்று எனக்கும் தெரியவில்லை.

அவர் இருக்குமிடத்து அவர் பேச்சில் சிரித்து சிரித்தே கண்ணீர் வரும். இப்போது அவரை நினைத்தே...

**(மின்னும்)**

மனம் திறக்கிறார் பிரசன்னா

# என் வலிகளுக்கு அர்த்தம்

தமிழ் சினிமாவில் ஓர் ஐந்து நட்சத்திர நாயகனாகத்தான் அறிமுகமானார் பிரசன்னா. இந்த நிமிடத்தோடு பத்துப் படங்களைத் தாண்டிவிட்டார். ஆனால், ஆக்‌ஷன் ஹீரோ இமேஜில் சிக்கிக் கிடக்கும் தமிழ் சினிமா ஹீரோக்களுக்கு மத்தியில், அரிதாக பிரசன்னா மட்டும் பொல்யூட் ஆகாமல் இருக்கிறார். நல்ல படங்கள் என்று மக்களால் அங்கீகரிக்கப்பட்ட 'ஃபைவ் ஸ்டார்', 'அழகிய தீயே', 'கஸ்தூரிமான்', 'கண்டநாள் முதல்' போன்ற படங்களில் நடித்ததன் மூலமாக நல்ல நடிகன் என்கிற அங்கீகாரத்தைப் பெற்றிருக்கிறார்.

'ஃபைவ் ஸ்டார்' படத்தில் அறிமுகமான ஐந்து புதுமுகங்களில் பிரசன்னா மட்டுமே நிலைத்து நிற்கிறார்.

''சினிமா ஆசை என்பது ரொம்ப நாளாகவே இருந்தது. பி.ஈ. முடித்தபிறகு கோடம்பாக்கத்துக்கு வரலாம் என்று நினைத்திருந்த நான் படிப்பு முடியும் முன்னே 'பைவ் ஸ்டார்' வழியாக உங்களையெல்லாம் சந்தித்துவிட்டேன்'' என்கிற பிரசன்னா சினிமாவுக்கு வந்து ஐந்து வருடங்கள் ஆகிவிட்டது.

நான் குறைவாக நடிப்பதுபோல் இருக்கும். அதேசமயம் என் கொள்கைகளை ஒருபோதும் விட்டுக் கொடுப்பதில்லை. மஞ்சள் வெயில், சீனாதானா, கண்ணும் கண்ணும், சாது மிரண்டா என என்னுடைய எல்லா படங்களும் தரத்தில் ஒன்றுக் கொன்று சளைத்தது கிடையாது.

'இப்படி இருந்தால் சிம்பு, ஆர்யாவோடு எல்லாம் எப்போது போட்டி போடுவதாக உத்தேசம்' என்றால், ''வேண்டவே வேண்டாம். போட்டி போடுவதால் யாருக்கும் எந்தப் பயனும் கிடையாது. என்னை வைத்துப் படம் பண்ண பெரும்பாலான இயக்குநர்கள் பயப்படுகிறார்கள். பிரபல மலையாள இயக்குநர் சித்திக் எனக்காகத் தேர்ந்தெடுத்தக் கதைதான் சாது மிரண்டா. சித்திக் படம் என்றால் வெற்றிக்கு கியாரண்டி உண்டு. அதனால், அவர் தமிழில் படம் பண்ண வரும்போது, பல பெரிய நடிகர்கள் இந்தக் கதையில் தாங்கள் நடிப்பதாக ப்ரஷர் கொடுத்தார்கள். ஆனால், சித்திக் மனம் மாறவில்லை'' என்கிறார் பிரசன்னா.

'ஆக்‌ஷன் ஹீரோவுக்குதானே அதிக பணமும் ரசிகர்

பட்டாளமும் குவிகிறது' என்றால் மறுக்கிறார். ''என்னால் முழு நேரமும் அரிவாள், கத்தி தூக்க முடியாது. எனக்கு எது தோதுபடும் என்று யாரையும்விட முதலில் எனக்குத் தெரிந்தாக வேண்டும். மற்றபடி பணம் ஒரு பிரச்னையே யில்லை. ஆக்‌ஷன் ஹீரோவாக நடித்துத் தான் சம்பாதிக்க வேண்டும் என்பதில்லை. கோடி ரூபாய் சம்பளம் சீக்கிரம் கிடைத்துவிடும். ஆனால், நல்ல கதை அவ்வளவு சுலபமாகச் சிக்காது. மோசமான படங்களில் மட்டுமே நடித்து கோடி கோடியாகச் சம்பாதித்தால் அது நீண்ட நாள் நீடிக்காது'' என்று தீர்க்கமாகப் பேசுகிறார்.

சென்டிமென்ட் கலந்த ஆவேச வசனங்கள் மீண்டும் மீண்டும் தமிழ்ப் படங்களில் வரும்போது ஆச்சர்யப்பட வேண்டியதில்லை. ஆனால், ஒரு நடிகர் பேசினால்? பெருமூச்சு விட்டுக் கொண்டு பேசுகிறார் பிரசன்னா.



# உண்டு!

''நிறைய போராடியிருக்கிறேன். வலிகளுக்குப் பஞ்ச மில்லை. 'ஃபைவ் ஸ்டார்' ரிலீஸுக்குப் பிறகு நல்ல கதைக்காக இரண்டு வருடங்கள் காத்திருந்தேன். 'அழகிய தீயே'வுக்குப் பிறகும் இதே காரணத்துக்காக இடைவெளி ஏற்பட்டது. நல்ல நடிகனாக இருந்தால் உங் களுக்கு எல்லாப் படங்களிலும் மரியாதை கிடைக்காது. என்ன நடந்தது என்று நான் இப்போது சொல்வதைவிட பெரிதாக சாதித்துவிட்டுச் சொல்கிறேன். அப்போதுதான் வலிகளுக்கு ஓர் அர்த்தம் இருப்பது வலுவாகப் புரியும்.

- செந்தில்

## ஃபெடரரின் ஆரோக்கியமான 'ரவுசுகள்!'

**"நானும் நிறைய ஆட்டங்களில் தோற்றவன் தான். ஆனால், தோல்விகளையும் கௌரவமாக ஏற்றுக்கொண்டேன்!"**

"என் வாழ்க்கையிலேயே நான் பார்த்த சிறந்த ஆட்டம் இதுதான்" என்கிறார் ஜான் மெக்கன்ரோ.

"அவர் ஒரு மேஜிசியன்" என்று சொல்கிறார் முன்னாள் நெம்பர் ஒன் டென்னிஸ் வீரர் மாரட் சஃபன்.

"என்ன ஓர் அருமையான ஆட்டக்காரர். இப்படியொரு டென்னிஸை நான் பார்த்ததுமில்லை; ஆடியதுமில்லை" என்று சலாம் போடுகிறார் ஆண்ட்ரே அகாசி.

"இன்றைய தேதியில் அவரோடு போட்டிபோட யாரும் கிடையாது. அவருடைய சாதனைகளே அவருக்குக் கடுமையான நெருக்கடிகளைக் கொடுக்கும்" என்று வாழ்த்துப் பாடல் பாடுகிறார் பீட் சாம்பராஸ்.

இப்படிச் சாரிசாரியாகப் பாராட்டுகிறார்கள்; பிரமிக்கிறார்கள். ஆம், அநேகர் விரும்பும் விசேஷ மனிதராகியிருக்கிறார் ஸ்விட்சர்லாந்தைச் சேர்ந்த ரோஜர் ஃபெடரர். ஒரு வருடம்கூட இடைவெளி விடாமல் ஐந்துமுறை விம்பிள்டன் பட்டத்தை வென்றிருக்கிறார். எல்லாம் சேர்த்து பதினொரு கிராண்ட்ஸ்லாம் கோப்பைகளுக்குச் சொந்தக்காரர் ஆகியிருக்கிறார். கடந்த இரண்டரை வருடங்களாக இவர்தான் நெம்பர் ஒன் டென்னிஸ் வீரர். இந்த நிமிடம் வரை டென்னிஸ் ஆடியே நூற்று ஐம்பது கோடிகளை, தனது பேங்க் அக்கவுண்டில் சேர்த்திருக்கிறார். தன்னுடைய வெற்றியின் ரகசியமாக அவர் சொல்வதெல்லாம் இவைதான்.

★ டென்னிஸ் ஆட்டத்தில் வெற்றி

களும் தோல்விகளும் மாறிமாறி வரும். எவ்வளவு ஜெயிக்கிறீர்களோ அவ்வளவும் தோற்கவும் செய்வீர்கள். ஆரம்பத்தில் கண்மண் தெரியாமல் தோற்பீர்கள். எந்தக் கணம் என்ன பயங்கரம் நிகழ்ந்து விடுமோ என்கிற நிலைமையெல்லாம் ஏற்படும். ஆனால், கண்ணோடு கண்ணாகத் தோல்விகளைச் சந்திக்கவேண்டும். எல்லா அனுபவங்களையும் பால் மாறாமல் ஏற்க வேண்டும்.

★ டென்னிஸ் கோர்ட்டில் என் உணர்வுகளைப் பூடகமாகக் காண்பிக்கமாட்டேன். அம்பயர்களிடம் சண்டை போடமாட்டேன். தவறு செய்தால், என்னை நானே நொந்துகொள்ள மாட்டேன்.

★ அமெரிக்கக் கூடைப்பந்து வீரரான மைக்கேல் ஜோர்டனை என் உதாரணப் புருஷராக எண்ணுகிறேன். சிறு வயதிலிருந்தே அவருடைய சாதனைதான் எனக்குள் உரம் போட்டது. இதேபோல இன்றைய சிறுவர்கள், என்னை ரோல்மாடலாக எண்ணிக்கொண்டு, கனவுகளை வளர்த்துக் கொள்ள வேண்டும் என ஆசைப்படுகிறேன்.

★ நானும் நிறைய ஆட்டங்களில் தோற்றவன்தான். ஆனால், தோல்விகளையும் கௌரவமாக ஏற்றுக்கொண்டேன். என்னைத் தோற்கடித்தவர்களை மதிக்கத் தொடங்கினேன். இவற்றால் என் ஆட்டத்தில் நிறைய முன்னேற்றங்கள் ஏற்பட்டன.

★ நாம் கற்பனையில் எல்லாத் துயரங்களையும் தாங்கிக்கொள்ளும் சக்தியுள்ளது போல நினைத்துக்கொள்கிறோம். ஆனால், உண்மையாக சங்கடங்கள் வருகிறபோதுதான், நாம் எவ்வளவு வலுக்குறைவானவர்கள் என்று தெரியவருகிறது. தோல்விகளால் காயப்படும்போது, அதைச் சரிகட்ட மேலும் கடுமையாக உழைத்திருக்கிறேன். இது ஒன்றுதான் தோல்வியிலிருந்து தப்பிக்கும் ஒரே வழி.

★ என் தொடர் வெற்றிகளெல்லாம் ஏதோ யோசனை பண்ணிச் செய்த காரியங்கள் இல்லை. செய்கிற தொழிலை எவ்வளவு காதலிக்கமுடியுமோ அவ்வளவு காதலித்தேன். ஆரம்ப காலங்களில் டென்னிஸை விட்டுப் போய்விடலாமா என்று கூட தோன்றியது. ஆனால், டென்னிஸ் மீதான ஆழமான காதலே உந்து சக்தியாக விளங்கியது. தொடர்ந்து இயங்கிக் கொண்டிருப்பதன் மூலம் வெற்றிக் கோட்டினைச் சுலபமாக நெருங்கலாம். தொடர்ந்து திறமைகளை மேம்படுத்திக் கொண்டே வாருங்கள். ஆனால், உடனடி பலனை ஒரு போதும் எதிர்பார்க்காதீர்கள்.

# ரோல் மாடல்- ரோஜர் ஃபெடரர்!



★ சிறுவயதில் டென்னிஸ் பழக்கத்தோடு கால்பந்தும் ஆடிக்கொண்டிருந்தேன். எதை முழுவதுமாகக் கற்றுக் கொள்வது என்றொரு சிறு குழப்பம் ஏற்பட்டது. ஆனால், டென்னிஸ்தான் என் வாழ்க்கை என்று முடிவு எடுத்தபோது கணப்பொழுதில் எல்லா பிரச்னைகளும் மிக அழகாகக் கரைந்துவிட்டன. பதினைந்து வயதுக்குள் சரியான பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். எனில், இருபத்தைந்து வயதுக்குள் என்னைப் போல சொற்ப அளவில் சில சாதனைகளைச் செய்து முடிக்கலாம்.

– ச.ந.கண்ணன்

## சாமான்யனின் அரசியல்!

அரசியல் கடித்தால் கொசுவுக்கும் சிக்குன் குன்யா வரும் என்பதை நறுக் கென சொல்லி அசத்திவிட்டார் பா.ராகவன்.

**கோவை, அலர்ஜி**

தமிழக அரசியல் எந்த அளவுக்கு தரம் தாழ்ந்து விட்டது என்பதை ஒரு கட்சித் தொண்டனின் பார்வை மூலமாக 'கொசு' நமக்குப் படம் பிடித்துக் காட்டியது.

**திருநெல்வேலி, வெ.கல்யாணி**

'கொசு' தொடர் கதையில் இனிமை யான முடிவினை எடுத்த ஆசிரியர் பா. ராகவனுக்கு எனது பாராட்டுகள்.

**சென்னை, டாக்டர் இளங்கோ**



'கொசு' அருமையான தொடர். படித்ததில் மனம் நிறைந்தது. அரசியல், ஒரு சாமான்யனின் குடும்ப வாழ்வை எவ்வாறு பாதிக் கிறது என்பதை படம் பிடித்துக் காட்டியது.

**சென்னை, எம்.எஸ். மணி**

**பி**ளேடு கீறி விட்டாலே அதை வைத் துக் கொண்டு அரசியல் செய்பவருக்கு மத்தியில், 'ஆர்.டி.எக்ஸ். துகள்கள் உடம் போடு கலந்து, ஒரே இடத்தில் நிற்காமல், அங்கேயும் இங்கேயும் அலைகின்றன' என்று சர்வசாதாரணமாகச் சொல்கிறாரே தோழர் தா.பாண்டியன், இவர் வைராக்கிய அரசியல்வாதிதான்.

**மயிலாடுதுறை, இரா.இராஜேந்திரன்**

**வ**யலூர் முருகன் கட்டுரையில் உருவாய் அருவாய் பாடலில் சந்தேகமா? 'உருவாய் அருவாய் உளதாய் இலதாய்' என்றுதானே இருக்க வேண்டும்! 'உருவாய் வருவாயாக மாறியதன் மர்மம் என்ன? கோட்டை விட்டுட்டீங்களே!

**ஒசூர், எஸ்.கோமதிலதா**

### காழ்ப்புணர்ச்சிக்கு இடமில்லை!

**க**ல்கி 1.7.2007 இதழில், கோயில்களில் தேவாரம் பாடுவது குறித்த தராசு கேள்வி - பதில், சிதம்பரம் சபாநாயகர் கோயிலில் தமிழ் மொழிக்கு இடமில்லை என்கிற தவறான கருத்துக்கு இடம் தருகிறது. ஆனால், அது உண்மையல்ல. அங்கே தமிழ் மொழிக்கும், தேவாரத் திருவாசகத்துக்கும் குறைவில்லை. அந்தப் பாடல்களுக்குச் சிறப்பான இடம் தரப்படுகிறது. கோயிலில், தேவார மூவர்க்கும் மாணிக்க வாசகருக்கும் தனிச் சன்னிதியே இருக்கிறது. ஓதுவார் தேவாரம் திருவாசகம் ஓதிய பின்னரே தீபா



ராதனை செய்யப்படுகிறது. ஓதுவார் மட்டு மல்ல, யார் வேண்டுமானாலும் பாடலாம்! மார்கழி திருவாதிரை ஒட்டிய ஆருத்ரா தரிசன விழாவின் மாணிக்கவாசகர் தீபா ராதனை நிகழ்ச்சியில், ஓதுவாரால் திருவெம்பாவைப் பாடல்கள் இருபதும் பாடப்படும். அது முடிந்ததும் மாணிக்க வாசகருக்குத் தீபாராதனை நடக்கும். பின்னர் ஆயிரமாயிரம் பக்தர்கள் கூடி நின்று உள்ளம் உருகி, திருவாசகம் ஓதும் காட்சி கண்கொள்ளாக் காட்சி. நாடு, மொழி, மதம், இனம் அனைத்துக்கும் அப்பாற்பட்டது சிற்சபை. அதனாலேயே வெளிநாட்டவர்கூட கோயிலின் உள்ளே அனுமதிக்கப்படுகிறார்கள். மற்ற கோயில் களில் இல்லாத நடைமுறை இது. இங்கே காழ்ப்புணர்ச்சிக்கு இடமேயில்லை.

சென்னை - 29, த.கி.நீலகண்டன்

'பார்த்திபன் கனவு' புதினம் மறு படியும் பிரசுரம் ஆவது மகிழ்ச்சி! இதழின் நடுப்பக்கங்களை ஒட்டி அச்சிட் டால் 'Bind' செய்வதற்குப் பிரித்தெடுக்கப் பேருதவியாக இருக்கும்.

குட்டலாடம்பட்டி, கொ.மூர்த்தி

'வளம் தரும் கோயில்' வயலூர் முருகன் கோயிலைப் பற்றிப் படிக்கும் போது வாரியார் சுவாமிகளின் நினைவு நெஞ்சை நெகிழ வைக்கிறது.

மதுரை, ஆர்.பிருந்தா

'மதுரை மேற்குத் தொகுதியில், தேர்தல் ஆணையம் வெற்றிபெற வில்லை எனில், ஜனநாயகம் படு தோல்வி அடைந்திருக்கும்' என்பதைக் கார்ட்டூன் மற்றும் தலையங்கம் மிக அருமையாக எடுத்துக் காட்டுகின்றன.

மதுரை, இரா.சக்கரபாணி






இந்திய அரசியலில் ஒரு வித்தியாசமான அரசியல் தலைவர் என்று அண்மையில் மறைந்த முன்னாள் பிரதமர் சந்திரசேகரைக் குறிப்பிடலாம். காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே இருந்துகொண்டு அதன் கொள்கைகளைக் கடுமையாக விமர்சனம் செய்த தைரியசாலி. அவரது வாதத்தில் நியாயம் இருக்கும் என்ப தால், எதிர்ப்பையும் மீறி அவர் மீது மரியாதை வைத்திருந்தார்கள் காங்கிரஸ் தலைவர்கள்.

சோஷலிச பிதாமகர்களான ஆச்சார்ய நரேந்திர தேவ், அஷோக் மேத்தா போன்ற வர்களை, அரசியல் ஆசான்களாக் கொண்டவர் சந்திரசேகர். நாட்டில் நெருக்கடி நிலை அறிவிக் கப்பட்டதைத் தொடர்ந்து ஜெயபிரகாஷ் நாராயணை மத்திய அரசு கைது செய்து, அழைத்துச் சென்றபோது, காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினராக இருந்தபோதிலும் ஜே.பி.யின் கைதை எதிர்த்துப் போராட்டம் நடத்தியதால் உடனடியாக சந்திரசேகரும் கைது செய்யப்பட்டு பத்தொன்பது மாத காலம் சிறை யில் அடைக்கப்பட்டார்.

அவர் பிரதமராகப் பொறுப்பேற்ற தருணத்தில், நம் நாட்டின் பொருளாதார நிலை மிக மோசமாக இருந்ததால், இந்தியாவின் தங்க இருப்பை அடமானம் வைக்க இவர் எடுத்த முடிவை எதிர்த்தவர்கள் உண்டு. "இந்த முடிவி னால் எனக்குக் கெட்ட பெயர் வரும்; ஆனாலும் வேறு வழி இல்லை" என்று சந்திரசேகர் கூறி னார். அந்தச் சிக்கலான தருணத்தில் அப்படி ஒரு துணிச்சலான முடிவை எடுக்காமல் இருந்தி ருந்தால், விளைவுகள் படுபயங்கரமாக இருந்தி ருக்கும் என்று பொருளாதார வல்லுநர்கள் சந்திரசேகரைப் பாராட்டினார்கள்.

- கௌதம் ராமு

சிரி சிந்தி செயல்படு!

# இடம் கிடைச்சாச்சு!

கருத்து : யுவா          படம் : பிள்ளை

இந்தச் சொத்துகள் தொண்டர்கள் கொடுத்தது

- மாயாவதி

தினச் செய்தி









ஜெயலலிதா மீது மற்றொரு வழக்கு



தினமுரசு

என் மீதான மீடியாவின் புகார்கள் பொய்!

-பிரதிபா பாட்டீல்



தின மாலை



post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka

தி சென்னை சில்க்ஸ்





# துணிமணிகளோடு தங்கம் பரிசு
# திக்குமுக்காடும் உங்கள் மனசு!

ஆகஸ்ட் 17 வரை நீங்கள் செய்யும் அனைத்து பர்சேஸ்களையும் ஒன்று சேர்த்து தள்ளுபடி தொகைக்குரிய தங்கம் பெறலாம்.

ரூ. 3000/- தள்ளுபடி மதிப்பிற்கு 4 கிராம் தங்கம்
ரூ. 5000/- தள்ளுபடி மதிப்பிற்கு 1 பவுன் தங்கம்

தள்ளுபடிக்கு தங்கம் பெறுங்கள்
ஆடிச் சலுகையில் திக்குமுக்காடுங்கள்!




*அனைத்து ஜவுளிகளுக்கும்
மொத்த விற்பனை விசாரணைகள்
வரவேற்கப்படுகிறது.

Conditions apply



## தி சென்னை சில்க்ஸ்

சென்னை • கோயமுத்தூர் • திருப்பூர் • ஈரோடு • திருச்சி

Shop online at www.thechennaisilks.com



பட்டு புடவைகள் | பேன்சி சேலைகள் | சர்டிங் | சூட்டிங் | ரெடிமேட்ஸ் | டிரெஸ் மெட்டீரியல்ஸ் | மேட்சிங் ரகங்கள் | கைத்தறி | ஃபர்னிஷிங்

*For business enquiries, contact TCS Textiles Pvt. Ltd., NH-47, Thekklur, Coimbatore. Ph: 04296-255773 / 774